A 
ACTIVE

B 
BUZZ BOSS

C 
CADET DX

D 
DEVIL DX

E 
ELEPHANT

F 
FISH

G 
GIRAFFE

H 
HEN

I 
INSECT

J 
JOKER

K 
KIDD DX

L 
LI'L ANGEL
LAMBADA LIMBO

M 
MISSILE MISS INDIA Jr

N 
NEST

O 
ORANGE

P 
PIRANHA

Q 
QUEEN Jr

R 
ROBO COP

S  
SPARKY SALSA

T 
TERMINATOR

V W




HTA.5979.2001

**The largest range of kids bikes**

**HERO CYCLES**

THE ABC OF CYCLING



இந்தியப் பண்பாடு-வரலாறு 47



கேள்விக்கு விடை புதிர் 19



மாயாஜால மலை 11



தேவி பாகவதக் கதைகள் 51

## பொருளடக்கம்





**SUBSCRIPTION**

For USA and Canada
Single copy $2
Annual subscription $20
*Remittances in favour of Chandmama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

பரிசளிப்புச் சந்தா
இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120
புக்போஸ்டில்
உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

இப்பத்திரிகையில் விளம்பரங்களை வெளியிடத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

சென்னை
Ph : 044-234 7384
234 7399
e-mail : advertisements@chandamama.org

டில்லி
மோனா பாட்டியா
Ph : 011-651 5111
656 5513/656 5516

மும்பை
ஷகீல் முல்லா
Mobile : 98203-02880
Ph : 022-266 1599
266 1946/265 3057



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

# அமைதியும் நல்லெண்ணமும்

இரண்டாயிரம் ஆண்டுகள் கழிந்து அடுத்து ஓராண்டும் இன்னும் சில நாட்களில் முடியப்போகிறது. இந்த ஆண்டு செப்டம்பரில் அமெரிக்காவைத் தீவிரவாதிகள் தாக்க பதிலுக்கு அவர்களைத் தாக்கி அழிக்க அமெரிக்கா அக்டோபரிலிருந்து ஆப்கானிஸ்தானத்தைத் தாக்கி வருகிறது. இது உலகில் பயங்கர விளைவுகளைத் தோற்று வித்து விடுமோ என்ற அச்சம் யாவரிடமும் குடிபுகுந்துள்ளது.

ஒரு துயரச் சம்பவம் ஒரு குடும்பத்து உறவினர்கள் அனைவரையும் ஒன்று கூட்டுவது போல இச்சம்பவங்கள் உலக நாடுகளை ஒரே விதமாக எண்ணும் படிச் செய்துள்ளன. ஆரம்பத்தில் ஏற்பட்ட ஆத்திரமும் கோபமும் இப்போது சற்றுத் தணிந்து யாவரையும் ஆழ்ந்து சிந்திக்க வைத்துள்ளது. தீவிரவாதத்தை ஒழித்து உலகில் மக்களை அமைதியுடனும் நேசமனப்பான்மையுடனும் எவ்வாறு வாழ வைக்கலாம் என்று யோசிக்கப்படுகிறது.

எந்த மதமும் பிறரை வெறுக்கும்படிக் கூறுவதில்லை. அன்பும் இரக்கமும் வேண்டும் என்றே எல்லா மதங்களும் போதிக்கின்றன. மேலும் உலகில் நாம் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்ட வர்கள் போன்ற நிலையில் தாம் உள்ளோம். எனவே நாம் அதை விட்டுப்போகும்போது அடுத்து வசிக்கப்போகிறவர்களுக்கு அதை நல்ல நிலையில் விட்டு விட்டே செல்ல வேண்டும்.

கிருஸ்துமஸ் அன்பையும் இரக்கத்தையும் பாசத்தையும் காட்டும் பண்டிகை. இதனை ஏற்று நடப்போம்.

---

ஆசிரியர் : **விஸ்வம்**



இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள்—3

நீங்கள் ராமாயணத்தையும் மகாபாரதத்தையும் விரும்புகிறீர்கள் அல்லவா? அவ்விரு காவியங்களில் உள்ள மாவீரர்கள் பற்றிய வினாக்கள் இவை.

முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்*

**1** சூரிய பகவானின் மகன் தன் நண்பர்களுக்காகத் தன் உயிரையும் கொடுப்பான். அவன் கொடைக்குப் பெயர் போனவன். அவன் யார்?

------------------------------------------------

**2** தன் தாயின் கர்ப்பத்தில் இருக்கையிலேயே அவன் போர் வியூகங்களை முறியடிக்க அறிந்தவன். அவன் போரில் ஒரு வியூகத்தின் நடுவே வீரமரணம் அடைந்தான். அவன் யார்?

------------------------------------------------

**3** இந்த வானர அரசகுமாரன் ராமரின் தூதனாக இலங்கைக்கு அனுப்பப்பட்டான். அந்த மாவீரன் யார்?

------------------------------------------------



**4** இந்த மாவீரர் தாம் விரும்பும் போது மரணத்தை அடையலாம் என்ற வரம் பெற்றவர். இவர் அம்புப்படுக்கையில் படுத்து தான் இறக்க நல்ல நேரத்தை எதிர்நோக்கி இருந்தார். இவர் யார்?

------------------------------------------------

**5** இந்த மாவீரர் தன் சகோதரர்களுடன் ஒரு வருடகாலத்திற்கு அஞ்ஞாதவாசம் புரிகையில் நடன ஆசிரியராக இருந்தார். இவர் யார்?

------------------------------------------------

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்குப்பிடித்தமான மாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களையும் பத்து சொற்களில் எழுதவும்: **''எனக்கு பிடித்தமான மாவீரர்''**

................................................................

................................................................

போட்டியாளரின் பெயர்:..........................

வயது: .................... வகுப்பு: ....................

முகவரி: ..................................................

................................................................

பின்கோடு: .................... போன்: ....................

போட்டியாளரின் கையொப்பம்: ..........................

பெற்றோரின் கையொப்பம்: ..........................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-3**

**சந்தமாமா இந்தியா லிமிடெட்**

நெ. 82. டிஃபென்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி

ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097

அனுப்ப வேண்டிய கடைசித் தேதி ஜனவரி 5, 2002

**நிபந்தனைகள்:**

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்ட சிறார்களுக்கு மட்டுமே.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்





# மதிப்பு தெரியுமா?

நாட்டு வைத்தியர் நஞ்சப்பனுக்கு அந்த ஊரில் நல்ல பெயர். கைராசிக்காரர் என்று எல்லோரும் அவரைப் புகழ்ந்து வந்தனர். பல ஊர்களிலிருந்தும் அவரிடம் வைத்தியம் செய்து கொள்ள நோயாளிகள் வந்தனர். ஒரு நாள் அவ்வூரிலுள்ள ராமய்யன் என்பவர் அவரிடம் வந்தார்.

ஏதோ மருந்துப் பொடியைச் சிறு சிறு பொட்டலங்களாகக் கட்டிக் கொண்டிருந்த நஞ்சப்பன் ராமய்யனைக் கண்டதும் ''வாருங்கள். உட்காருங்கள். இந்த மருந்துப் பொட்டலங்களைக் கட்டி முடித்து விட்டு உங்கள் விஷயத்திற்கு வருகிறேன்'' என்றார்.

வைத்தியர் பொட்டலம் கட்டிக் கொண்டிருக்கையில் அவரது வீட்டு வாசலில் ''ஐயா நொண்டி!! நடக்க முடியாதவன். குருடனும் கூட. எதையும் பார்க்க முடியாதவன். ஏதாவது தர்மம் கொடுங்கள்'' என்ற உரத்த குரல் கேட்டது. வைத்தியர் ''போ, போ'' என்று கூறிக் கையை ஆட்டியதும் அவன் போய் விட்டான்.

ராமய்யன் தான் வந்த விஷயத்தைச் சொல்லலாமென்று எண்ணித் தொண்டையை கனைத்து சரி செய்து கொண்ட போது மறுபடியும் வாசலில் ''ஐயா! தள்ளாத கிழவன். வேலை எதுவும் செய்ய முடியாதவன். ஏதாவது தர்மம் கொடுங்கள்'' என்று நடுங்கிய குரலில் ஒரு பிச்சைக்காரன் உரக்கக் கூறியது கேட்டது.

அப்போதும் வைத்தியர் கடுப்புடன் ''போ. போ! ஒன்றும் கிடையாது'' என்று கூறி விரட்டினார். அப்போது ராமய்யன் ''வைத்தியரே! நான் உங்களிடம்...'' என்று கூறும் போதே வாசலில் பயங்கர சத்தம் கேட்டது. நல்ல உடல்கட்டு கொண்ட ஒருவன் முகத்தில் சாயம் பூசிக்கொண்டு ஒரு சாட்டையால் தன் உடல் மீதே 'பளார்' பளாரென்று அடித்துக் கொண்டிருந்

-சிவனார் செல்வன்-



தான். அவனருகே ஒரு பெண் நின்று கொண்டு, 'டம் டம்' மென்று மத் தளத்தை இடைவிடாமல் தட்டிக் கொண்டிருந்தாள். வைத்தியர் சட் டென எழுந்து போய் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு ரூபாயை எடுத்து அந்தப் பெண்ணிடம் கொடுக்கவே, அவர்கள் இருவரும் உடனே அங்கிருந்து போய் விட்டார்கள்.

அதன் பிறகு வைத்தியர் உள்ளே வந்தார், ''சரி, ராமய்யா! வந்த விஷயத் தைச் சொல்லுங்கள்''. எனவே ராமய்யனும் ''ஐயா! ஒரு சந்தேகம். கேட்கலாமா?'' எனவே வைத்திய ரும் ''உங்கள் சந்தேகம் என்ன? '' என்றார்.

ராமய்யனும் ''ஐயா! முதலில் ஒருவன் குருடன், நொண்டி எனக் கூறிப்பிச்சை கேட்டான். அடுத்து வயதானவன் ஒருவன் வந்து பிச்சை கேட்டான். அவர்களுக்கெல்லாம் எது வும் கொடுக்காமல் போகச் சொல்லி விட்டீர்கள். ஆனால் உடல் கட்டு கொண்ட ஒருவனும், அவனோடு இருந்த பெண்ணும் வந்து பெரும் சத்தத்தை உண்டாக்கியதும் உடனே நீங்கள் எழுந்து போய் ஒரு ரூபாயைக் கொடுத்து உடனே அனுப்பி விட்டு வந்தீர்கள். இது ஏன் என்று தான் எனக்குப்புரியவில்லை'' என்றார்.

வைத்தியரும் ''ராமய்யா! நொண் டிக்கும் குருடனுக்கும் வயதான வனுக்கும் நான் பிச்சை போடாது போனாலும் அவர்களுக்கு எதுவும் கிடைக்காமல் போய் விடாது. வேறு வீடுகளுக்குப் போய்க் கேட்டு எதை

யாவது பெற்றுக் கொண்டு போவார்கள். ஆனால் கடைசியாக வந்த கட்டு மஸ்தானவனுக்கு நான் கொடுத்தது பிச்சையல்ல'' என்றார். அதைக் கேட்ட ராமய்யா ''அது பிச்சை இல்லையென்றால் வேறு என்னவாம்?'' என்று கேட்டான்.

வைத்தியரும் ''கடைசியாக வந்து கூக்குரல் போட்டவர்கள் சண்டித்தனம் செய்பவர்கள். அவர்களது சாட்டையடிகளும் மத்தளக்கொட்டுகளும் நம் காதுகளைத் துளைக்கும். அவற்றைக் கேட்டுக் கொண்டிருக்கவும் முடியாது. பணம் கொடுக்காவிட்டால் அரை மணி நேரம் இந்த சாட்டை அடிகளையும் மத்தளக் கொட்டுகளையும் நாம் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டி வரும். அப்போதும் காசு கொடுக்காவிட்டால் வாய்க்கு வந்தபடி. திட்டி விட்டே போவார்கள். அதனால் தான் அவர்கள் வந்ததுமே நான் எழுந்து போய் ஒரு ரூபாயைக் கொடுத்து அனுப்பி விட்டு வந்தேன். இதனால் அரைமணி நேரத்தையும், மன நிம்மதியையும் காத்துக் கொள்ள முடிந்தது'' என்றார்.

ராமய்யா உடனே துளாவி ஒரு ரூபாயை எடுத்து வைத்தியர் முன் வைத்து ''நான் உங்களிடம் பேச்சுக் கொடுத்து உங்களது அரிய நேரத்தைப் பாழாக்கி விட்டேன். அதற்காக இந்த ஒரு ரூபாயை வைத்துக் கொள்ளுங்கள்'' என்றார்.

வைத்தியர் அந்த ரூபாயை எடுத்துக் கொள்ளாமல் சிரித்தவாறே ''இதோ பாரும்! நீங்கள் தவறாகக் கணக்கிட்டு விட்டீர்கள். நான் ஒரு ரூபாய் கொடுத்து அரைமணி நேரத்தை வாங்கியது ஒரு பிச்சைக்காரனின் நேரத்தை. அவன் எவ்வளவு நேரம் கத்தினாலும் ஒரு ரூபாய்க்கு மேல் கொடுக்க மாட்டேன். ஆனால் நீங்கள் பேர் போன வைத்தியரின் நேரத்தை வாங்கி இருக்கிறீர்கள். அதற்கு ஒரு ரூபாயல்ல. நீங்கள் வந்த காரணத்தைக் கூறுங்கள். அப்போது அதற்கான கட்டணத்தைக் கூறி உங்களிடமிருந்து வாங்கிக் கொள்வேன்'' என்றார்.

ராமய்யாவும் சரியே எனக் கூறி அசட்டுச் சிரிப்பு சிரித்தான்.



உங்களுக்கான புதிர் வினாக்கள்

# கோணார்க்



ஓரிஸ்ஸாவில் கோணார்க்கில் நம்மை பிரமிக்க வைக்கும் சூரிய தேவாலயம் உள்ளது. 13வது நூற்றாண்டில் கட்டப் பட்ட இது சிற்பக்கலையில் உயர்ந்து விளங்குகிறது. கோணார்க் என்பதன் பொருள் சூரிய மூலை என்பதாம். இக் கோவிலின் சிறப்பு அதன் வடிவமே. மிகப் பெரிய தேரின் வடிவில் இது உள்ளது.

சூரியரதத்தின் பன்னிரண்டு சக்கரங் களும், தேரில் பூட்டப்பட்ட ஏழு குதிரைச் சிலைகளும் காலத்தைக் குறிக் கின்றன. பன்னிரண்டு சக்கரங்கள் பன்னி ரண்டு மாதங்களையும், ஏழு குதிரைகள் ஒரு வாரத்தின் ஏழு நாட்களையும் குறிக்கும்.

இந்த ஆலயம் வங்காளவிரி குடாவை நோக்கி இருப்பதால் கடலில் விழும் சூரிய கிரணங்கள் இதன் மீது பட்டு அதைப் பல கோணங்களில் பிரதிபலித்து ஒளி வீசச் செய்கிறது. இதன் உச்சிக்கட்ட டம் இடிந்து விழுந்து விட்டது. ஆனால் நடனக் கூடமும் பார்வையாளர் பகுதி யும் சேதம் அடையாமல் அப்படியே உள்ளன. ஆலய முழுவதிலும் அழகான சிற்பச்சிலைகள் உள்ளன. யுனெஸ்கோ நிறுவனம் இதனையும் உலகின் பழங் கால பண்பாடுள்ளதாக அறிவித்துள்ளது.

கோணார்க்கின் சூரியாலயத்தின் அருங்காட்சியகத்தில் இதன் இடிபாடு களிலிருந்து எடுக்கப்பட்ட பல சிற்பச்சிலைகளைக் காணலாம்.

---

**உங்களுக்கான புதிர் வினாக்கள்**

**(14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்)**

## போட்டி—IV

1. குஷபத்திர நதி கடலில் சேரும் இடத்தில் சூரியாலத்திலிருந்து சற்றுத் தொலைவில் அமைந்துள்ள புகழ் பெற்ற ஆலயம் எது?

 ------------------------------------------------

2. ஒரு காலத்தில் துறைமுகமாக இருந்து தற்போது கடற்கரைத்தலமாக உள்ளது எது?

 ------------------------------------------------

3. ஆசியாவிலேயே பெரிய செயற்கை ஏரியை உருவாக்கிய ஓரிஸ்ஸாவிலுள்ள அணைக் கட்டு எது?

 ------------------------------------------------

உங்கள் விடைகளைத் தெளிவாக அவற்றிற்காக விடப்பட்ட இடங்களில் எழுதி இந்தக் கூப்பனைக் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

**Orissa Tourism Quiz Contest**
**Chandamama India Limited**
**No.82, Defence Officers Colony**
**Ekkatuthangal, Chennai - 600 097**

பெயர் : ........................................

வயது : ........................................

முகவரி : ........................................

........................................

பின்கோடு.................. போன் ..............



Winners picked by Orissa Tourism in each contest will be eligible for **3-days, 2-night** stay at any of the **OTDC Panthanivas**, upto a maximum of four members of a family. Only original forms will be entertained. The competition is not open to CIL and Orissa Tourism family members. Orissa Tourism, Paryatan Bhaven, Bhubaneswar-751 014. Ph: (0674) 432177, Fax : (0674) 430887, e-mail : ortour@sancharnet.in. Website : Orissa-tourism.com




# 11

(மலைக்கோட்டையருகே வீரபுரக்குதிரைப் படையிடம் தோற்று சொர்ணம் சில ஒட்டக வீரர்களுடன் காட்டிற்குள் ஓடிப் போனான். அங்கு அவன் கஜவர்மனையும் ஜீவதத்தனையும் சமரபாகுவையும் கண்டான். கரடியப்பன் தன் சீடர்களின் குரு பக்தியை நிரூபிப்பதாகக் கூறி ஒரு சீடனை உயரமான மரத்தில் ஏறி பள்ளத்தாக்கில் குதிக்கும்படிக் கட்டளை இட்டான். அந்த சீடனும் மரத்தில் ஏறிக் குதித்தான். அப்போது...)

கரடியப்பனின் சீடன் மரத்தின் மீதிருந்து குதித்துத் தரையை அடைவதற்குள் ஜீவதத்தன் ஓடிப்போய் தன் மந்திரத்தடியை நீட்டி அவனைத் தரை மீது மெதுவாக வந்து நிற்கச் செய்தான். அச்சீடனோ ஜீவதத்தனிடம் ''என்ன இது? குருவின் கட்டளையை ஏற்று நான் பள்ளத்தாக்கில் விழுந்து மடிந்திருந்தால் நான் சொர்க்கத்திற்குப் போயிருப்பேனே. அங்கே போக விடாமல் தடுத்து விட்டீர்களே'' என்று கூறினான்.

ஜீவதத்தனோ ''நீ இறந்தால் சொர்கத்திற்குப் போவாயோ அல்லது நரகத்திற்கு போவாயோ என்பதெல்லாம் எனக்குத் தெரியாது. இப்போது நீ சாகாமல் உயிருடன் இருக்கிறாய். நீ இனி உன் குருவிற்கும் சமரபாகுவுக்கும் பல உதவிகளைச் செய்ய வேண்டும்'' என்றான்.

அங்கு கரடியப்பனும், சமரபாகுவும், கஜவர்மனும் வந்தார்கள். அப்போது கரடியப்பன் ஜீவதத்தனிடம் ''என் சீடர்களின் குருபக்தி எத்தகையது என்று இப்போது தெரிந்ததா?'' என்று கேட்டான். ஜீவதத்தனும் ''உன்



ஒளிந்து கொண்டிருப்பதாகச் சொல்ல வேண்டும். என்ன, நான் சொன்னது புரிந்ததா?'' என்று கேட்டான்.

அவர்களும் ''புரிந்தது. உங்கள் கட்டளையை எம் குருவின் கட்டளையாக மதிக்கிறோம். நீங்கள் கூறிய படியே செய்து விடுகிறோம்'' என்றார்கள். அதன் பின் அவ்விருவரும் அங்கிருந்து போய் அலைந்து திரிந்து வீரர்களைக் கண்டார்கள். உடனே அவர்கள் உரத்த குரலில் ''குருவே! நாங்கள் இங்கே தான் இருக்கிறோம்'' என்று நாலைந்து தடவைகள் கூவினார்கள்.

அதைக் கேட்ட வீரபுரக் குதிரைப் படைகளின் தளபதி ''ஆகா! இவர்கள் கரடியப்பனின் ஆட்கள். இவர்கள் இப்போது நம்மிடம் வசமாக மாட்டிக் கொண்டார்கள். இவர்களைப் பிடிப்போம்'' என்று கூறி தன் வீரர்களுடன் அந்தக் குரல் கேட்ட இடத்திற்கும் சென்றான். வீரபுர வீரர்களைக் கண்டதும் கரடியப்பனின் இரு சீடர்களும் ''ஐயோ! எதிரிகளிடம் சிக்கி விட்டோமே. நமக்கு வேறு வழி இல்லை. பேசாமல் சரணடைந்து விடுவோம்'' எனக் கூறித் தம் ஆயுதங்களைக் கீழே போட்டார்கள்.

வீரபுர வீரர்கள் அவர்களைப் பிடித்துக் கொள்ளவே, அவர்களும் ''ஐயா! எங்களைக் கொன்று விடாதீர்கள். எங்கள் குருவை எங்கள் எதிரிகள் பிடித்துவிட்டார்கள். இனி நாங்கள் எங்கே போவது?'' என்றார்கள். அது கேட்டு தளபதி ஆச்சரியப்பட்டு ''உங்கள் குருவை எதிரிகள் பிடித்துக்

சீடர்கள் உன் பரம பக்தர்களே. இவனோடு இன்னொரு சீடனையும் கொடு. இவர்களிருவரும் நான் சொல்லப்போகும் வேலையைச் செய்து முடித்து விட்டு வர வேண்டும்'' என்றான். கரடியப்பன் தன் மற்றொரு சீடனைத் தன்னருகே வரச் சொல்லவே, ஜீவதத்தன் அந்த இரு சீடர்களிடமும் ''இந்தச் சுற்றுப் புரத்தில் வீரபுரவீரர்கள் எங்கோ ஓரிடத்தில் இருக்கிறார்கள். நீங்கள் அங்கு போய் அவர்களிடம் அகப்பட்டுக் கொண்டவர்கள் போல நடித்து அவர்களோடு சேர்ந்து விட வேண்டும். அவர்களிடம் மலைக் கோட்டையிலிருந்து தப்பி ஓடிய சமரபாகுவின் வீரர்கள் கரடியப்பரின் உறைவிடமான சுரங்கத்தினுள்

கொண்டார்களா? யார் அந்த எதிரிகள்?'' என்று கேட்டான்.

அதற்குகரடியப்பரின் சீடர்களில் ஒருவன் ''இன்று காலை சில ஒட்டக வீரர்கள் திடீரென எங்கள் சுரங்க உறைவிடத்தில் புகுந்து தாக்கினார்கள். அப்போது நாங்கள் விருகேஸ்வரி தேவிக்குப் பூஜை செய்து கொண்டிருந்தோம். அப்போது அவர்கள் எங்களில் பலரைக் கொன்று விட்டார்கள். நாங்களும் எம் குருவும் அவர்களுக்கு அகப்படாமல் காட்டிற்குத் தப்பி ஓடினோம்'' என்றான்.

தளபதி உடனே இரு குதிரை வீரர்களிடம் ''நீங்கள் இருவரும் மலைக் கோட்டைக்குப் போய் சேனாதிபதியிடம் எதிரிகள் கரடியப்பனின் சுரங்க உறைவிடத்தில் இருக்கிறார்கள் என்று தெரிவியுங்கள்'' எனக் கூறி அனுப்பினான். பிறகு கரடியப்பனின் சீடர்களிடம் ''உங்கள் குருவின் உறைவிடம் எங்கே இருக்கிறது என்று காட்ட வேண்டும். எங்கள் சேனாதிபதி வரும் வரை அந்த மரத்தடியே இருங்கள்'' எனக் கூறி ஒரு வீரனுடன் அவர்களை அனுப்பினான்.

தளபதி அனுப்பிய வீரர்கள் சேனாதிபதியைக் கண்டு தளபதியின் செய்தியைக் கூறினார்கள். சேனாதிபதி அது கேட்டு ஒரேயடியாய் மகிழ்ந்து போய் உடனே சில குதிரை வீரர்களையும் காலாட்படை வீரர்களையும் கூட்டிக் கொண்டு தளபதி இருக்கும் இடத்தை அடைந்தான். தளபதியும் விஷயத்தை விளக்கவே, சேனாதிபதி கரடியப்பனின் இரு சீடர்



களையும் வழியைக் காட்டச் சொல்லி தன் சிறு படையுடன் அவர்கள் பின்னால் சென்றான்.

அனைவரும் சுரங்க உறைவிட வாயிலை அடைந்தார்கள். சேனாதிபதி தன் குதிரையிலிருந்து இறங்கி நின்று ''நான் வீரபுர சேனாதிபதி. பெரும் படையுடன் வந்திருக்கிறேன். உள்ளே இருப்பவர்கள் எல்லோரும் தம் ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டு இங்கே வர வேண்டும். உங்களுக்கு இரண்டு நிமிடமே அவகாசம் கொடுக்கிறேன். அதற்குள் நீங்கள் வந்து என்னிடம் சரணடையா விட்டால் நான் என் படையோடு உள்ளே புகுந்து உங்களைக் கண்ட துண்டமாக வெட்டி எறிவேன்'' என்று உரக்கக் கூவினான்.

கால் மணி நேரமாகியும் யாரும் வெளியே வரவில்லை. சேனாதிபதி காலாட்படைவீரர்களுடனும் குதிரை களிலிருந்து இறங்கி நின்ற வீரர்களு டனும் சுரங்கவாசல் வழியே உள்ளே சென்றான். அங்கும் அவர்களுக்கு வழி காட்டியவாறே கரடியப்பனின் இரு சீடர்கள் முன்னால் நடந்தனர்.

இச்சமயத்தில் ஜீவதத்தனும், கஜ வர்மனும் சமரபாகுவும் கரடியப்ப னும் சுரங்க வாசலுக்கு வந்து சேர்ந் தார்கள். ஜீவதத்தன் அவர்களிடம் ''வீரபுர சேனாதிபதி சுரங்க உறை விடத்தில் வசமாக மாட்டிக் கொண்டி ருக்கிறான். அவர்களைத் திக்கு முக் காடச் செய்ய இந்த வாசலில் மரக் கட்டைகளைப் போட்டு நெருப்பு மூட்டி அதிலிருந்து கிளம்பும் புகையை சுரங்கப்பாதை வழியாக உள்ளே போகச் செய்வோம். இந்த வேலையைக் கரடியப்பன் தன் சீடர்களைக் கொண்டு செய்விக்க வேண்டும்'' என்றான்.

கரடியப்பனும் தன் சீடர்களிடம் சுற்றுப்புறங்களிலிருந்து மரக்கட்டை களை எடுத்து வந்து அங்கே போடும் படிக் கூறினான். சற்று நேரத்தில் சுரங்கப்பாதை வாசல் முன் மரக் கட்டைகள் குவிந்து விட்டன. ஒரு சீடன் அதற்குத் தீ மூட்டினான். புகை சுரங்கப்பாதைக்குள் செல்லலா யிற்று. அப்போது ஜீவதத்தன் ''ஓ வீரபுர சேனாதிபதியே! நீயும் உன் வீரர்களும் ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டு சுரங்கபாதை வழியே வெளியே வந்து எங்களிடம் சரண டைய வேண்டும். அப்படிச் செய்யா விட்டால் தீ உள்ளே நெருங்கி சூழ்ந்து உங்களை எல்லாம் எரித்துச் சாம்ப லாக்கி விடும்'' என்று உரத்த குரலில் எச்சரித்தான்.

சுரங்க உறைவிடத்தில் எதிரிகள் எங்கே பதுங்கி இருக்கிறார்கள் என்று தேடிக் கொண்டிருந்த வீரபுர சேனாதி



பதிக்கு ஜீவதத்தனின் எச்சரிக்கை காதில் விழுந்தது. அப்போது தான் எதிரிகள் யாருமே சுரங்க உறைவிடத் தில் இல்லை என்பது அவனுக்குத் தெரிந்தது. கரடியப்பனின் சீடர்கள் தன்னை ஏமாற்றி அங்கே கொண்டு வந்து விட்டார்கள் என்பது அப்போது அவனுக்குப் புரிந்தது.

அந்நிலையில் என்ன செய்வது என்று சேனாதிபதி யோசித்துக் கொண்டிருக்கையில் சுரங்கப்பாதை வழியாக அடர்ந்த புகை வந்தது. இன் னும் சற்று நேரத்தில் நெருப்பு பரவி சுரங்க உறைவிடமே தீப்பற்றி எரிந்து போய் விடுமோ என்று அவன் பயந் தான். அவன் உடனே தன் ஆயுதங் களைக் கீழே போடும்படிக் கட்டளை இட்டான். அவர்களும் அக்கட்ட ளைப்படி நடந்து தம் ஆயுதங்களைக் கீழே போட்டார்கள்.

அதன் பிறகு சேனாதிபதி சுரங்க வாயிலை நோக்கி ''வீரபுர சேனாதி பதியான நானும் என் வீரர்களும் சரண டைகிறோம். ஆயுதங்கள் எதுவும் இல்லாமல் இங்கிருந்து வெளியே வருகிறோம்'' என்று உரக்கக் கூறி னான். அப்போது ஜீவதத்தன் கஜவர் மனிடம் ''கஜா! அந்த வீரபுர சேனாதி பதி கூறுவதை நம்பலாமா?'' என்று கேட்டான். அப்போது கரடியப்பன் குறுக்கிட்டு ''இதோ பாருங்கள். அரசர்களோ அல்லது அரசாங்க உத்தி யோகஸ்தர்களோ கூறுவதை அப் படியே நம்பி விடக்கூடாது. முதலில் அவர்களோடு இருக்கும் என் இரு சீடர்களை அழைத்து விசாரித்து



உண்மையைத் தெரிந்து கொள்ளலாம்'' என்றான்.

ஜீவதத்தனும் ''கரடியப்பா! நீ சொல்வது சரி தான். நீயே உரத்த குரலில் உன் சீடர்களை முதலில் இங்கே வரச் சொல்'' என்றான். கரடி யப்பனும் அவ்வாறே செய்வதாகக் கூறி சுரங்க வாசல் முன் நின்று கொண்டு ''சீடர்களே! உங்கள் குரு பேசுகிறேன். முதலில் நீங்கள் இரு வரும் வெளியே வாருங்கள். அது வரை சேனாதிபதியும் அவரது வீரர் களும் அங்கேயே இருக்கட்டும்'' என்று உரக்கக் கூறினான். தம் குரு வின் கட்டளையைக் கேட்டதுமே அவனது சீடர்கள் இருவரும் சுரங்கப் பாதை வழியாக வெளியே வந்தார்கள்.

சுரங்க உறைவிடத்திலிருந்த



சேனாதிபதியோ தவியாய்த் தவித் தான். தான் கரடியப்பனிடமும் சமர பாகுவிடமும், கஜவர்மனிடமும், ஜீவதத்தனிடம் கைதியாகி நிற்கப் போவதை எண்ணி அவன் மனம் கலங்கினான்.

கரடியப்பனின் சீடர்கள் சுரங்க உறைவிடத்தில் நடந்ததைக் கூறினார் கள். அதைக் கேட்ட பின் ஜீவதத்தன் சேனாதிபதியைச் சுரங்கப் பாதை வழியாக வெளியே வரும்படிக் கூறி னான். அதன்படியே அவன் வெளியே வந்ததும் முதலில் நின்ற ஜீவதத்த னுக்கு வணக்கம் செலுத்தினான். அப் போது ஜீவதத்தன் சமரபாகுவை சுட்டிக் காட்டி ''இவர் தான் சமரபாகு மன்னர். இப்பகுதியை ஆள்பவர். இவரிடம் தான் நீங்கள் தோற்றீர்கள். இவருக்கு வணக்கம் செலுத்துங்கள்'' என்றான்.

வீரபுர சேனாதிபதி குனிந்து பணி வாக சமரபாகுவை வணங்கினான். இதற்குள் சுரங்க வாசல் வழியாக வீரபுர வீரர்கள் வெளியே வந்தார்கள். அப்போது சமரபாகு சொர்ணத்திடம் ''மந்திரியாரே! போர்க்கைதிகளான இவர்களுக்கு என்ன தண்டனை கொடுக்க வேண்டும்?'' என்று கேட்டான்.

சொர்ணமும் ஜீவதத்தனையும் கஜ வர்மனையும் கலந்து ஆலோசித்து விட்டு ''அரசே! இவர்களை எப்படி தண்டிக்க வேண்டும் என்பது வீரபுர மன்னர் நம்மோடு எவ்விதம் நடந்து கொள்வார் என்பதைப்பொறுத்து உள் ளது. முதலில் இவர்களை எல்லாம் நம் மலைக்கோட்டைச்சிறைச்சாலை யில் அடைத்து வைப்போம்'' என் றான். சமரபாகுவும் அப்படியே செய்யுங்கள் என்றான்.

அதற்கு முன் சமரபாகு கொள் ளைக்காரர்களின் தலைவன். ஆனால் மன்னன் என்று அவ னைக் கூறியதும் அரசனைப் போல கம்பீரமாகப் பேசியது கண்டு ஜீவதத்த னும் கஜவர்மனும் ஆச்சரியப்பட்டார் கள். ஒரு சிறு வெற்றி ஒரு தலை வனை எப்படி மாற்றி விடுகிறது என்று எண்ணி அவர்கள் மனதிற்குள் சிரித்துக் கொண்டார்கள்.

சமரபாகுவும் '' க்ஷத்திரிய இளை ஞர்களே! இனி நம் மலைக் கோட்டைக்கு நாம் போகலாமா?'' எனவே ஜீவதத்தனும் ''மகாராஜாவே! தங்கள் சித்தம் போலவே நடக்கட்

டும்'' எனச் சற்று கேலியாகக் கூறினான். குதிரைகள் மீதும் ஒட்டகங்களின் மீதும் ஏறி அமர்ந்த சமரபாகுவின் ஆட்கள் வீரபுர வீரர்களை நடத்தி மலைக்கோட்டைக்குக் கொண்டு சென்றார்கள்.

அவர்கள் மலைக்கோட்டையை அடைந்ததும் மலை அடிவாரத்தில் ஒரு மரத்தடியே ஒரு உயர்ந்த ஆசனத்தில் வயதான ஒருவர் அமர்ந்திருக்க அவரைச் சுற்றி பலர் இருப்பதை ஜீவதத்தனும் கஜவர்மனும் பார்த்தார்கள். அவர்களைப் பார்த்த வயோதிகர் இரு பக்கங்களிலும் இருவர் வர ஜீவதத்தன் இருக்கும் இடத்திற்கு வந்தார்.

அவர் ஜீவதத்தனிடம் ''நான் வீரபுர மன்னரின் மந்திரி. நீங்கள் இருவரும் ஜீவதத்தனும் கஜவர்மனும் தானே?'' என்று கேட்டார். அவர்களும் 'ஆம்' எனக் கூறி அவரை வணங்கினார்கள். அப்போது சமரபாகு சொர்ணத்துடன் வரவே ஜீவதத்தன் அவர்களை வீரபுர மந்திரிக்கு இன்னாரென அறிமுகம் செய்து வைத்தான்.

மந்திரியும் ''தமது பலத்தால் வென்ற இப்பகுதியை சமரபாகு மன்னர் தாராளமாக ஆண்டு வரட்டும். இதை எம் மன்னர் தெரிவிக்கச் சொன்னார். ஆனால் நான் இதைத் தெரிவிக்க மட்டும் வரவில்லை. உங்களிருவருடனும் தனிமையில் பேச வேண்டும்'' என்றார்.

அவர் சமரபாகுவை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்து விட்டு ஜீவதத்தனையும் கஜவர்மனையும் அங்கிருந்து சற்றுத் தொலைவிற்கு அழைத்துப் போய் ''உங்களைப் பற்றிப்பலர் கூறக்கேட்டதோடு நேற்று ஒரு யக்ஷன் உங்களைப்பற்றிப் பல விஷயங்கள் கூறியதையும் கேட்டேன்'' என்றார்.

அவர்களிருவரும் ''யக்ஷனா? யாராக இருக்கும்?'' என யோசிக்கையில் மந்திரி அவர்களை இன்னமும் சற்று தூரம் அழைத்துப்போய் ஒரு நதியைக் காட்டி ''அதோ தெரியும் தேர்வடிவிலுள்ளள படகைப் பாருங்கள்'' என்றார். ஜீவதத்தன் ஏதோ நினைவுக்கு வந்தவன் போலத் தன் மந்திரத்தடியை ஆட்டியவாறே நதியை நோக்கிச் சென்றான்.

(தொடரும்)



# இருட்டான சிறையே மேல்!

அரண்மனையில் திருடன் ஒருவனைக் காவலாளிகள் பிடித்து மன்னன் முன் கொண்டு போய் நிறுத்தினார்கள். மன்னனும் ''இவனை இருட்டான அறைக்குள் ஐந்தாண்டு காலம் சிறை வையுங்கள். அதற்குப் பிறகும் இவன் உயிருடன் இருந்தால் இவனை என் முன் கொண்டு வந்து நிறுத்துங்கள்'' என்று கூறினான். காவலாளிகளும் அந்த முரட்டு வாலிபத்திருடனைக் கொண்டு போய் ஒரு இருட்டறையில் சிறை வைத்தார்கள்.

ஐந்தாண்டுகள் அச்சிறை வாசத்தை அனுபவித்த அத்திருடன் இறந்து விடவில்லை. அதனால் மன்னனின் கட்டளைப்படி காவலாளிகள் அவனை மன்னனின் முன் கொண்டு போய் நிறுத்தினார்கள்.

இளைத்துத் தளர்ந்து தள்ளாடும் அவனைக் கண்ட மன்னன் இரக்கப்பட்டு ''உன்னை விடுதலை செய்கிறேன். இனி நீ எங்கு வேண்டுமானலும் உன் விருப்பப் படித் திரியலாம்'' என்றான்.

அத்திருடன் அப்போது மன்னனிடம் ''அரசே! எனக்கு விடுதலை வேண்டாம். என்னை அந்த இருட்டறையிலேயே என் வாழ்நாள் முழுவதும் அடைத்து வையுங்கள். ஆரம்பத்தில் சிறைவாசம் சற்று கஷ்டமாகவே இருந்தது. ஆனால் நாளாக ஆக அது சுகமாகி விட்டது. அங்கு விடியற்காலையில் எழுப்பி விடுகிறார்கள். அப்போது அன்று சாப்பாட்டிற்கு என்ன செய்வது என்ற என் கவலையைப் போக்கி வேளாவேளைக்கு உணவு அளிக்கப்படுகிறது. பணம் சம்பாதிக்க வீதிகளில் திரியும் அலைச்சல் எனக்கு மிச்சமாகிறது. மேலும் பகல் வெளிச்சத்தையும் குளிர் காற்றையும் வெளியில் நான் அனுபவித்து சிரமப்படவேண்டும். அந்த சிரமம் இருட்டுச்சிறையில் இல்லை. எனவே என்னை மீண்டும் அந்தச் சிறையிலேயே அடைத்து வையுங்கள்'' என்றான்.

அப்போது மனிதர்களுக்கு என்னென்ன சிரமங்கள் உள்ளன என்பது மன்னனுக்குப் புரிந்தது. அத்திருடனுக்கு ஆறுதல் கூறி அவனைத் தன் தோட்டத்திலேயே இருந்து வேலை செய்யவும் ஏற்பாடு செய்தான்.



வேதாளம்
சொல்லும்
கதை

# கேள்விக்கு விடை புதிர்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்தப் பயங்கர நள்ளிரவில் ஏன் இப்படி வீணாகச் சிரமப்படுகிறாய்? யாராவது நீ கேட்ட கேள்விக்குப் புதிர் ஒன்றை விடையாகக் கூறி



உன்னைக் குழப்பி இருக்கிறார்களா? இதை விளக்க உனக்கு ஒரு கதை கூறு கிறேன். கவனமாகக்கேள்'' என்று கூறிக் கதையைச் சொல்லலாயிற்று.

வெகு காலத்திற்கு முன் தேவந்திர சிம்மன் என்ற மன்னன் நாட்டை நன்கு ஆண்டு வந்தான். தனக்கு அவ் வப்போது ஆலோசனைகள் கூற ஒரு அந்தரங்க ஆலோசகரை நியமித்துக் கொள்ள அவன் எண்ணினான். அப் பதவிக்கு ஏற்றவர் வித்தியாதரர் என்ற உயர்குடிமகன் என அவன் முடிவு செய்தான். அவனது மனைவி தன் கண வன் அந்தரங்க ஆலோசகர் ஒருவரை நியமிக்கப் போவதை அறிந்து தன் மாமா கமலாகரரை அப் பதவியில் நியமிக்கும்படி வற்புறுத்தினாள்.

மன்னனோ ''இதோ பார்! இந்தப் பதவியை வகிப்பவர் நல்ல அனு பவம் பெற்றவனாயும், திறமை மிக்க வனாயும் இருக்க வேண்டும். அத னால் தான் நான் வித்யாதரருக்கு அப் பதவியை அளிக்க நினைத்தேன்'' என்றான்.

அது கேட்டு ராணி ''என் மாமா கமலாகரர் வித்தியாதரரை விட எவ் விதத்திலும் தாழ்ந்தவரல்ல. பார்க்கப் போனால் நல்ல அனுபவம் மிக்கவர். நல்ல அறிவாளி. திறமைசாலியும் கூட. அதனால் அவரையே உங்கள் அந்தரங்க ஆலோசகராக நியமித்துக் கொள்ளுங்கள்'' என்றாள்.

மன்னனும் சிரித்துக் கொண்டே ''நீ உன் மாமனைத் திறமைசாலி என்று கூறுகிறாய். நான் வித்தியா தரரை இப்பதவிக்கு ஏற்றவர் எனக் கருதுகிறேன். இந்த நியமன விஷயத் தில் நான் அவசரப்படப்போவ தில்லை. உன்னைத் திருப்திப்படுத்த வும் யார் திறமைசாலி எனக் கண்டு கொள்ளவும் அவ்விருவருக்கும் பரீட்சை வைக்க வேண்டும். அதில் தேறியவரை என் அந்தரங்க ஆலோசக ராக நியமித்து விடுகிறேன். சரி தானே'' எனவே ராணியும் ''அவ் வாறே செய்யுங்கள்'' எனக் கூறினாள்.

தலைநகரில் ஒரு பிரபல வியாபாரி இருந்தார். அவருடைய ஒரே மகளை மணக்க மூன்று பணக்கார இளைஞர் கள் போட்டி போட்டார்கள். மூவரும் சமநிலையில் எல்லாத்தகுதிகளை யும் பெற்றவர்களாக இருந்ததால் அவர்களில் யாரைத் தேர்ந்தெடுப்பது என்ற பிரச்சினை அந்த வியாபாரிக்கு ஏற்பட்டது. அதனால் அவர் அந்த

மூன்று இளைஞர்களையும் தான் முழுக்க முழுக்க நம்பும் யோகானந்தர் என்ற யோகியிடம் அனுப்பினார்.

யோகானந்தர் தலைநகரிலிருந்து சற்றுத் தொலைவிலுள்ள ஒரு மலையில் வசித்து வந்தார். வியாபாரி அனுப்பி வைத்த மூன்று இளைஞர்களும் அவர் இருக்கும் இடத்திற்குச் சென்று அவரைக் கண்டார்கள். தன்சீடன் வியாபாரி அவர்களை அனுப்பிய காரணத்தை அறிந்து கொண்ட அவர் மூவரையும் உற்று நோக்கினார். பிறகு அவர் மூன்று மண்பாண்டங்களை எடுத்து அவற்றில் ஒன்றில் மண்ணையும் மற்றதில் நீரையும் மூன்றாவதில் தானிய விதைகளையும் நிரப்பி அவர்கள் ஒவ்வொருவரிடம் ஒன்றைக் கொடுத்து அனுப்பினார்.



மூவரும் தலைநகருக்கு வந்து யோகியார் தமக்குக் கொடுத்த மண் பாண்டங்களைக் காட்டினார்கள். அதைக் கண்ட வியாபாரிக்கு யோகியார் என்ன சொல்ல விரும்பினார் என்பது தெரியவில்லை. அதனால் அவர் அந்த மூன்று இளைஞர்களை அவர்கள் கொண்டு வந்த மண்பாண்டங்களை எடுத்து வரச் சொல்லி அவர்களை அழைத்துக் கொண்டு போய் மன்னனைக் கண்டார். அவர் தம் பெண்ணிற்கு மணமகனைத் தேர்ந்தெடுக்க யோகியார் புதிர் போல அளித்துள்ள பதில் தமக்குப் புரியவில்லை என்றும் அது என்ன என்று தனக்குக் கூறுமாறும் வேண்டினார்.

மன்னனும் அம்மூவரிடமும் யோகியாரின் பதில் என்னவாக இருக்கலாம் என்று கேட்டான். முதலாவது இளைஞன் ''அவர் ஒரு மண் பாண்டத்தில் மண்ணை நிரப்பிக் கொடுத்தார். மண் இல்லாவிட்டால் நீரினாலும் விதையினாலும் ஒரு பயனும் இல்லை. எனவே யோகியார் என்னைத் தான் மணமகனாகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்'' என்றான்.

இரண்டாவது இளைஞனோ ''எனக்கு யோகியார் நீர் நிறைந்த பாண்டத்தைக் கொடுத்திருக்கிறார். நீர் இல்லா விட்டால் மண்ணும் விதையும் இருந்து என்ன பயன்? எல்லா உயிர்களுக்கும் நீர் மிகமிக அவசியம். தண்ணீர் நிரம்பிய பாண்டத்தை யோகியார் என்னிடம் கொடுத்து நானே இவரது மகளை மணக்க ஏற்றவன் எனத் தெரிவித்து இருக்கிறார்'' என்றான்.



மூன்றாவது இளைஞனோ ''நீரும் மண்ணும் மட்டும் இருந்தால் எதுவும் வந்து விடாது. விதை இருந்தால் தான் அது முளைத்துப் பயிராகி உணவு தானியத்தைக் கொடுக்கும். யோகி யார் மண்பாண் டத்தில் தானியத்தை நிரப்பி என்னிடம் கொடுத்ததால் அவர் என்னையே இவரது மகளுக்கு ஏற்ற மணாளன் என்று குறிப்பிட்டு இருக்கிறார்'' என்றான்.

அப்போது மன்னனுக்கு இதுவே கமலாகரருக்கும் வித்தியாதரருக்கும் வைக்க வேண்டிய பரீட்சை எனத் தோன்றியது. அச்சமயத்தில் அவ்விரு வருமே சபையில் இருந்தனர். மன்னர் கமலாகரரிடம் ''இதற்கு நீங்கள் என்ன தீர்ப்பு கூறுவீர்கள்?'' என்று கேட்டான்.

கமலாகரரும் ''மண்ணும் விதையும் இருந்து விட்டாலே நமக்கு வேண்டியது கிடைத்து விடுமா? நீர் மண்ணில் சென்று விதையை முளைக்க வைத்தாலே நமக்கு தானியம் கிடைக்கும். எனவே யோகியார் நீர் நிரம்பிய மண்பாண்டத்தைக் கொடுத்த இளைஞனையே மணமகனாகத் தேர்ந்து எடுத்திருக்கிறார்'' என்றார். மன்னன் வித்தியாதரரிடம் ''உங்கள் தீர்ப்பு என்னவோ?'' என்று கேட்டார்.

வித்தியாதரரும் ''நான் இதற்கு விடை கூறுமுன் அம்மூன்று பாண்டங்களையும் பார்க்க வேண்டும்'' என்றார். பிறகு அவர் மண்பாண்டத்திலிருந்த நீரைக் கொஞ்சம் எடுத்துக் குடித்தார். மற்ற மண்பாண்டத்திலிருந்த மண்ணை முகர்ந்து பார்த்தார். பிறகு மூன்றாவது பாண்டத்தில் இருந்த தானியத்தை தொட்டு நசுக்கிப் பார்த்தார். அதன் பிறகு அவர் ''அரசே! யோகியார் மண்ணை மண்பாண்டத்தில் போட்டுக் கொடுத்த இளைஞனையே மணமகனாகத் தேர்ந்தெடுத்து இருக்கிறார்'' என்றார்.

இதனால் திருப்தி அடையாத மன்னன் மறுநாள் யோகியாரையே தன் சபைக்கு வரவழைத்தான். அவரும் ''விலையுயர்ந்த வைரம் கிடைப்பது மிக அரிது அத்தகைய வைரம் ஒன்று உன் சபையில் உள்ளது. அதை நீயே கண்டு கொள். அதனால் உனக்கும் உன் நாட்டிற்கும் நன்மை ஏற்படும்'' எனக் கூறிவிட்டுச் சென்றார்.

மன்னனும் அவரை வணங்கி மரி

யாதையுடன் வழி அனுப்பிவிட்டு தன் அந்தரங்க ஆலோசகரர் யார் என்பதை அப்போதே அறிவித்தான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னா! யோகியார் எதற்கும் புதிரையே விடையாகச் சொன்னாரே. மன்னன் யாரைத் தன் அந்தரங்க ஆலோசகராகத் தேர்ந்தெடுத்தான்? அது ஏன்? இக்கேள்விகளுக்குச் சரியான விடைகள் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''மன்னன் தேவேந்திரசிம்மன் நல்ல அறிவாளி. அவன் முதலில் மூன்று இளைஞர்கள் கூறிய பதிலாலும் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு கமலாகரருக்கும் வித்தியாதரருக்கும் பரீட்சை வைத்து அவர்கள் கூறிய விடைகளாலும் திருப்தி அடையாமல் அவன் யோகியாரை வரவழைத்தான். அவரும் தம் வழக்கப்படி விடையை ஒரு புதிராகக் கூறிவிட்டுச் சென்றார். அவர் வைரம் எனக் குறிப்பிட்டது வித்தியாதரரையே எனப்புரிந்து கொண்ட மன்னன் அவரையே தன் அந்தரங்க ஆலோசகராக நியமித்தான். அந்த மூன்று இளைஞர்கள் கொண்டு வந்த மண்பாண்டங்களை வித்தியாதரரைத் தவிர வேறு யாருமே சோதித்துப் பார்க்கவில்லை. வித்தியாதரர் ஒவ்வொரு பாண்டத்திலுள்ளதையும் பரீட்சித்துப்பார்த்தார். அதனால் தண்ணீர் மிகவும் உப்புக் கரித்ததோடு அதில் கிருமிகள் இருப்பதைக் கண்டார். தானியமோ சொத்தையாயும் நசுக்கினால் அமுங்கிப் போவதாயும் இருப்பதை அவர் பார்த்தார். மண்ணை முகர்ந்து அது மிக நல்லது என்றும் கண்டு கொண்டார். அதனால் தான் மண் நிறைந்த மண்பாண்டத்தை அந்த இளைஞனிடம் யோகியார் கொடுத்து அவனைத் தேர்ந்தெடுத்திருக்கிறார் என அவர் ஊகித்தே கூறினார்.'' என்றான்.

விக்கிரமனின் சரியான பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக்கிளம்பிப்போய் மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.



இந்தியப் பண்டிகைகள்

# கிருஸ்துமஸ்



டிசம்பர் மாதம். கிருஸ்துமஸ் வந்து விட்டால் ஒரே கோலாகலந் தான். மணியோசை, சாண்டாக்ளாஸ் வருகை, பரிசுகள், கேக்குகள் என்று பார்க்கிறோம்.

உலகம் முழுவதிலும் கிருஸ்துமஸ் டிசம்பர் 25ந் தேதி கொண்டாடப்படுகிறது. அது ஏசு கிருஸ்து பிறந்த நாள். கிருஸ்துவ மதத்தின் தாபகர் இவர்.

கிருஸ்துமஸ் நல்லெண்ணத்தைக் குறிக்கும் பண்டிகை. அச்சமயம் எங்கும் குதூகலமும் மகிழ்ச்சியுமே இருக்கும். இந்தியாவில் கிருஸ்துமஸ் அந்தந்தப் பிராந்தியங்களின் வழக்கப்படி கொண்டாடப்படுகிறது. ஒவ்வொரு வீடும் விளக்குகளால் அலங்கரிக்கப்படுகிறது. ஒரு கிருஸ்துமஸ் மரத்தை உருவாக்கி பலூன்களையும், வண்ணக்கொடிகளையும் தோரணங்களையும் கட்டுகிறார்கள். காகித நட்சத்திரங்களை ஒட்டுகிறார்கள். இப்படியாக, வீடுகளிலும், கடைகளிலும் அலங்காரங்களைச் செய்கிறார்கள். சில வீடுகளில் ஏசு கிருஸ்துவின் வாழ்க்கைச் சம்பவங்களை படங்களிலும் பொம்மைகள் வாயிலாகவும் காட்டுகிறார்கள்.

கிருஸ்துமஸிற்கு முதல் நாள் மாலையில் கரோல்பாடகர்கள் தெருக்களில் பாடியவாறே ஒவ்வொரு வீட்டிற்குப் போய் வருகிறார்கள். கிருஸ்துமஸ் நாளன்று நள்ளிரவில் அல்லது விடியற்காலையில் சர்ச்சுகளின் பொதுப்பிரார்த்தனைகள் (மாஸ்) நடத்தப்படுகின்றன. அதன் பின் யாவரும் தம் உறவினர்களையும், நண்பர்களையும் கண்டு பரிசுகளை அளிக்கிறார்கள். வீட்டில் குடும்பத்தின் அனைவரும் ஒன்றாக அமர்ந்து விருந்து உண்கிறார்கள்.

கிருஸ்துமஸ் கேக் இல்லாமல் அப்பண்டிகை கொண்டாடப்படுவதே இல்லை. இந்தக் கேக்குகள் வழக்கமாக வீடுகளில் தான் செய்யப்படுகின்றன.

# கிருஸ்துமஸ் மரத்தை உருவாக்குங்கள்

இதோ புனித பண்டிகை கிருஸ்துமஸ் வந்து விட்டது. மகிழ்ச்சி பொங்கும் இந் நாளில் நீங்களே கிருஸ்துமஸ் மரத்தை அழகுறச் செய்து வீட்டை அலங்கரியுங்கள். இதற்கு ஒரு கத்தரிக்கோலும், பசையும் இருந்தாலே போதும். இனி கீழே கொடுக்கப்பட்டுள்ளதைக் கவனமாகப் படியுங்கள்.

1. இந்தப் பக்கத்தை எடுத்து ஒரு அட்டையில் ஒட்டி படங்களைத் தனித்தனியாகக் கத்தரிக்கவும்
2. 'ஏ'யில் படத்தில் காட்டியது போல கீழ்ப்பகுதியில் மத்தியிலும் 'பி'யில் மேல் பகுதியிலும் கத்தரிக்கவும்.
3. கத்தரித்த 'ஏ' பகுதியில் 'பி' பகுதியை நுழைக்கவும்.
4. மரத்தின் உச்சியில் நட்சத்திரத்தை ஒட்டவும்
5. இதில் வண்ணக்குச்சிகளையும், வண்ண உருண்டைகளையும் பசை கொண்டு ஒட்டவும்

ஆகா! அழகான கிருஸ்துமஸ் மரம் தயாரிக்கப்பட்டு விட்டதே! இனி இதை உங்கள் ஷோகேஸில் வைக்கலாம்.










# ஈத்–உல்–ஃபிதர்



ஈத்-உல்-ஃபிதரன்று எங்கும் ஈத்-முபாரக் என்ற வாழ்த்துக்களையே கேட்கிறோம். ரம்ஜான் ஈத் என்ற முஸ்லிம் பண்டிகை மிகக் கவர்ச்சியாக உள்ளதாகும். இது ரமதான் மாதத்தின் இறுதியில் வரும் பண்டிகையாம். ரமதான் மாதத்தில் அமாவாசைக்கு மறுநாள் ஈத் கொண்டாடப்படுகிறது. இந்த ஆண்டில் ஈத்-உல்-ஃபிதர் டிசம்பர் 17ல் வருகிறது.

இந்த மாதம் முழுவதும் பகல் வேலைகளில் முஸ்லிம்கள் பட்டினியாக இருக்கிறார்கள். சூரியன் உதிக்கு முன் அவர்கள் உணவை உண்டு சூரியன் மறைந்தபின் தான் தமது உண்ணாமைநோன்பை முறிக்கிறார்கள். பகலில் அவர்கள் எதுவும் சாப்பிடுவது இல்லை. நீர் கூட அருந்துவது இல்லை.

ஈத் அன்று உறவினர்களும், நண்பர்களும் ஒருவருக்கு மற்றவர் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறார்கள். எல்லோரும் கூடி தொழுகை நடத்துகிறார்கள். இது பெரிய மைதானத்தில் நடக்கும். இதற்கு முஸ்லிம் மதத்தலைவர் காஜி ஊர்வலமாக அழைத்து வரப்படுகிறார். தொழுகைக்குப் பின் அவர் அறிவுரை வழங்குகிறார். இதற்குப்பின் யாவரும் கலைந்து சென்று தம் நண்பர்களையும், உறவினர்களையும் சந்தித்து விட்டு விருந்துண்ணச் செல்கிறார்கள்.

முஸ்லிம்களில் ஷியாப்பிரிவினர் ரமதான் மாதத்து இருபத்தி ஒன்றாவது நாளையும் இருபத்திரண்டாவது நாளையும் துக்க நாட்களாகக் கருதுகிறார்கள். இந்த துக்கம் மகம்மது நபி நாயகத்தின் மாப்பிள்ளை அலியின் வீரமரணத்திற்கானதாம்.

இந்த மாதத்தில் தான் புனித குர்ஆன் மேலுலகிலிருந்து இவ்வுலகிற்கு வந்ததாகக் கருதப்படுகிறது. இந்த மாதத்தின் கடைசி பத்து இரவுகளில் குர்ஆன் முதலில் போதிக்கப் பட்டதாகக் கருதப்படுகிறது.

# திருக்கார்த்திகை



திருக்கார்த்திகைப்பண்டிகை தமிழ்நாட்டில் கார்த்திகை மாதத்தில் தீபங்கள் பண்டிகையாகக் கொண் டாடப்படுகிறது. இந்த ஆண்டில் திருக்கார்த்திகை நவம்பர் 30ந் தேதி வருகிறது. இது மூன்று நாட்கள் கொண்டாடப்படுகிறது. இப் பண்டிகை சிவபிரான் பஞ்ச பூதங் களில் ஐக்கியமாகி இருப்பதைக் காட்டுவதாகக் கருதப்படுகிறது.

திருவண்ணாமலையிலுள்ள அருணாசலேஸ்வரர் ஆலயத்தில் சிவ பிரான் அக்கினியாக திகழ்கிறார் என்று கருதப்படுகிறது. ஒவ்வொரு ஆண்டி லும் கார்த்திகை மாதத்தில் பரணி நட்சத்திரநாளில் அருணகிரி எனப் படும் மலையின் உச்சியில் தீபம் ஏற்றுப்படுகிறது. இப்பண்டிகை யுடன் மழை காலம் முடிந்து விட்ட தாகவும் மக்கள் கருதுகிறார்கள்.

கார்த்திகை மாதம் பிறந்ததுமே பெண்கள் மண் அகல் விளக்குகளை ஏற்றித் தம் வீட்டு வாசல்களில் மாலை யில் வைக்கிறார்கள். திருவண்ணா மலையில் மலை மீது மாபெரும் ஜோதி விளக்கு ஏற்றப்படும் நாளன்று தமிழ்நாட்டில் ஒவ்வொரு வீட்டிலும் திருக்கார்த்திகைப்பண்டிகையை கொண்டாடுகிறார்கள். வீடுகளில் முன் வாசலில் அகல்விளக்குகளை வரிசையாக வைத்து எரியவிட்டும் சிறப்புப்பூஜைகளைச் செய்தும் வழிபடுகிறார்கள்.

காலையில் எல்லா வீடுகளிலும் மாவிளக்குகள் அரிசிமா, வெல்லம், நெய் ஆகியவற்றின் கலவையால் செய்யப்பட்டு ஏற்றப்படுகின்றன. சிவபிரானைத்துதித்துப் பூஜைகளை யும் செய்கிறார்கள். தீபாவளியின் போது வெடித்தது போக மீதமுள்ள பட்டாசுகளை சிறுவர்கள் திருக்கார்த்திகையின் போது வெடித்து மகிழ்கிறார்கள்.



# இரக்கத்திற்கான இன்பரிசுகள்

வெகு காலத்திற்கு முன் மகாராஷ்டிரத்து கேத்காம் என்ற கிராமத்தில் சந்தீப் என்ற சிறுவன் இருந்தான். அவனை அவனது தந்தையைத் தவிர அவ்வூரார் யாவரும் விரும்பினார்கள். அவனது தந்தையோ ''நீயோ பார்வையற்றவன். உன்னால் என்ன வேலை செய்ய முடியும்? நீ வீட்டை விட்டுப் போய் விடு. பிச்சை எடுத்து எங்காவது போய்ப்பிழை'' என்று கூறித்தன் மகனை வீட்டை விட்டு வெளியேற்றிவிட்டான்.

சந்தீப் தன் நாய் மோதியுடன் வீட்டை விட்டுச் சென்றான். மோதி அவனது உற்ற நண்பன். அது அவனை விட்டுப் பிரியாமல் இருந்து வந்தது. சந்தீப் ஊர் ஊராகப் போய் பாடிப் பிச்சை எடுத்து வந்தான். இப்படியாக ஐந்து ஆண்டுகள் கழிந்தன.

ஒரு நாள் மாலை ஒரு ஊர்க் கோவில் வாசலில் சந்தீப்பும் மோதியும் களைத்துப் போய்ப்படுத்தார்கள். அப்போது சந்தீப் ''மோதி! எனக்கு மட்டும் பார்வை இருந்தால் நீயும் நானும் இப்படிச் சிரமப்பட வேண்டி இராதே. எல்லாம் கடவுள் விதித்த விதி'' என்று அலுத்துக் கொண்டு கூறியவாறே தூங்கலானான்.

தூக்கத்தில் அவன் ஒரு விசித்திரக் கனவைக் கண்டான். அதில் ஒரு தேவதை அவனருகே வந்து ''சந்தீப்! என்னைப்பார்'' என்றது.



சந்தீப் போ ''தேவதையே! அது தான் என்னால் முடியாது. எனக்குப் பார்க்கும் சக்தி கிடையாதே'' என மனம் உடைந்து கூறினான். அதைக் கேட்ட தேவதை புன்னகை புரிந்து ''கவலைப்படாதே சந்தீப்! நான் உனக்கு உதவுகிறேன். நீ ஒவ்வொரு தடவையும் நற்செயல்புரியும் போது உன் கண் சற்று விரியும். அப்போது உன்னால் கொஞ்சம் பார்க்க முடியும். ஆனால் நீ கெடுதல்களைச்

செய்யும் போது நீ அடைந்த பார்வை முற்றிலும் மங்கிப் போய் விடும். இதை நினை வில் வைத்துக் கொண்டு செயல்படு'' என்று கூறி விட்டு மறைந்தது.



சந்தீப்பின் தூக்கம் கலைந் தது. அவன் தன்னுள் ஏதோ ஒரு புதிய சக்தி புகுந்தது போல உணர்ந்தான். மோத்தியும் மகிழ்ச்சியுடன் வாலைக் குழைத்துக்கொண்டு அவனைச் சுற்றிச்சுற்றி வந்தது. சந்தீப்பும் ''மோத்தீ! நீயும் மகிழ்ச்சியுடன் இருக்கிறாயா? நாளை முதல் நமக்கு நல் வாழ்வு கிடைக்கும்'' என்றான்.

மறுநாள் காலை அவன் மோத்தி யுடன் கிளம்பியபோது அவனது கண்கள் மீது சூரிய வெளிச்சம் படவே முதல் முறையாக அவனது கண்கள் கூசின.

அப்போது அவன் மனம் ''ஆகா! கனவில் தேவதை கூறியது பலிக் கப்போகிறது. இனி நான் எல்லாவற் றையும் பார்க்கப் போகிறேன்'' என்று எண்ணி மகிழ்ந்தது. அவன் தன் நாயுடன் சென்ற போது ஒருவன் ''ஐயா! வயதானவன் காலில்லாத வன். ஏதாவது தர்மம் செய்யுங்கள்'' என்று வேண்டினான்.

சந்தீப் அவன் மீது இரக்கம் கொண்டு தன்னிடம் இருந்த ஒரே ரூபாயை அக்கிழவனுக்குக் கொடுத்து விட்டான்.

அப்போது அவனது கண்கள் சற்று விரிந்தன. கண்கள் கூசவே சந்தீப் சட்டெனக் கண்களை மூடி சற்று நேரம் கழித்துத் திறந்தான். அவனால் பார்க்க முடிந்தது. ஆனால் தெளிவாக எதுவும் தென்படவில்லை. ஆயினும் அவன் தன் நாயிடம் ''மோத்தீ! கன வில் தேவதை கூறியது பலிக்கிறது'' என மகிழ்ச்சி ததும்பக் கூறவே, நாயும் ஆனந்தக் கூத்து ஆடியது.

அன்றிரவு அவர்கள் ஒரு கிழப் பிச்சைக்காரியைக்கண்டனர். அவள் தனக்கு சாப்பிட ஏதாவது கொடுக்கும் படிக் கெஞ்சவே, சந்தீப் உடனே தனக்குக்கிடைத்த உணவை அவளுக் குக் கொடுத்து விட்டான். அப்போது அவனது கண்கள் மேலும் சற்று விரிந் தன. பார்வை சற்றுத்தெளிவாயிற்று. அவனால் நிலவின் ஒளியைக் காண முடிந்தது.

மறுநாள் காலையில் அவர்கள் தூங்கி எழுந்த போது அவர்களுக்கு



கேட்டு அதன் விலையையும் கொடுத்து விடுவோம்'' என்றான். அதன் பின் சந்தீப் சுற்றிலும் விசாரித்துக் கோழியின் சொந்தக்காரனை அணுகினான். அவனிடம் ''இந்த நாய் தவறுதலாகத் தங்கள் கோழியைப் பிடித்து வந்து என்னிடம் கொடுத்தது. நான் அதை விற்று விட்டேன். என் தவறை மன்னித்து உங்கள் கோழிக்கான விலையை நீங்கள் பெற்றுக்கொள்ளுங்கள்'' என்று கூறிப் பணத்தைக் கொடுத்தான். கோழியின் சொந்தக்காரனும் அவனை மன்னித்து விட்டு பணத்தை வாங்கிக் கொண்டு மகிழ்ச்சியுடன் சென்றான். அப்போது சந்தீப்பின் கண்கள் சற்று விரியவே அவன் மிகவும் மகிழ்ந்து போனான்.

ஒரே பசி. இருவரும் ஏதாவது கிடைக்குமா என்று பார்த்தவாறே சென்ற போது மோத்தி ஒரு பெட்டைக் கோழியைக் கண்டு அதன் மீது பாய்ந்து அதனைத் தன் வாயில் கவ்வியது. சந்தீப்பும் ''சபாஷ் மோத்தி! இதனை கடைத்தெருவில் விற்று அந்தப் பணத்தில் ஏதாவது வாங்கி நாம் சாப்பிடுவோம்'' என்றான். அவர்கள் அதனை விற்று உணவு வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது அதுவரை சற்று விரிந்திருந்த சந்தீப்பின் கண்கள் குறுகிவிட்டன. அவனால் அப்போது எதையும் பார்க்க முடியவில்லை.

அப்போது சந்தீப் ''மோத்தீ! நாம் செய்தது தவறு. யாருடைய கோழியையோ பிடித்து விற்று விட்டோம். அதன் சொந்தக்காரரைக்கண்டு பிடித்து அவரிடம் மன்னிப்பும்

இப்படியே நாட்கள் கழிய சந்தீப்பும் ஒவ்வொரு நாளும் நல்ல செயல்களையே செய்து கொஞ்சம் கொஞ்சமாகப் பார்க்கும் சக்தியை அடைந்து வந்தான். ஒரு நாள் ஒரு ஊரினருகே அவர்கள் போய்க் கொண்டிருந்த போது ஒரு குரல் ''ஐயோ! நான் நீரில் மூழ்கிக் கொண்டிருக்கிறேனே! என்னை யாராவது காப்பாற்றுங்களேன்'' எனக் கதறியது.

அப்போது சந்தீப் ''மோத்தீ! என்னால் தெளிவாகப் பார்க்க முடியவில்லை. எனக்கு நீந்தவும் தெரியாது. நீ போய் நீரில் மூழ்கிக் கொண்டிருப்

பவரைக் காப்பாற்றுகிறாயா?'' என்று கேட்டான். மோத்தியும் தலையை ஆட்டிவிட்டு ஓடியது. அது நீரில் குதித்து மூழ்கிக் கொண்டிருந்த மனிதனைக் கரைக்கு இழுத்து வந்தது. ஆனால் மோத்தி கரை சேருமுன் இறந்து விட்டது.

சந்தீப் அந்த மனிதனின் குரல் கேட்டு ஓடி வந்தான். அவன் ''ஓ! நீங்கள் பிழைத்து விட்டீர்களா? என் நாய் எங்கே?'' என்று கேட்டான். அந்த மனிதனும் ''நாய் என்னைக் காப்பாற்றி இழுத்து வந்தது. நான் பிழைத்து விட்டேன். ஆனால் அது இறந்து விட்டது. என்னால் அதைக் காப்பாற்ற முடியவில்லை'' எனக் கண் கலங்கக் கூறினான்.

சந்தீப்போ ''ஆ! என் ஆருயிர் மோத்தீ! நீ போய் விட்டாயே'' என்று கதறிக்கதறி அழுதான். அப்போது அந்த மனிதன் ''அழாதே. உன் மனதைத் தேற்றிக்கொள். உன் தந்தை இதற்கு பதிலாக வேறொரு நாயை வாங்கிக் கொடுப்பார்'' என்று ஆறுதல் கூறினான். அப்போது சந்தீப் ''என் தந்தையா வாங்கிக் கொடுப்பார்? மாட்டவே மாட் டார். இரக்கமில்லாமல் பார்வையற்ற என்னை என் ஐந்து வயதில் வீட்டை விட்டுத் துரத்தியவராயிற்றே அவர்'' என்றான்.

அப்போது அந்த மனிதன் சந்தீப்பை உற்றுப்பார்த்து ''நீ சந்தீப் தானே'' எனக் கேட்க அவனும் ஆம் ''நீங்கள் யாரென்று எனக்குத் தெரியவில்லையே'' என்றான். உடனே அந்த மனிதன் ''மகனே! நான் தான் உன் அப்பா! நடந்து போனதற்கு வருந்துகிறேன். வா. வீட்டிற்குப் போகலாம்'' என்றான். அப்போது சந்தீப்பின் கண்கள் அகல விரிந்தன. அவனும் ''ஆ! எனக்குப் பார்வை வந்து விட்டது. எல்லாம் தெளிவாகத்



தெரிகிறது'' என மகிழ்ச்சி ததும்பக் கூவினான்.

அவனது தந்தையும் ''இது எப்படி நடந்தது?'' எனவே சந்தீப் தன் கனவில் தேவதை தோன்றிக் கூறியதைச் சொன்னான். அவனது தந்தை அவனை வீட்டிற்கு அழைத்துப் போய் 'மின்னி' என்ற நாயை வாங்கிக் கொடுத்தார். ஆயினும் சந்தீப்பால் மோத்தியை மறக்க முடியவில்லை.

# சிரிப்பூட்டும் சிந்தனையாளர்கள்—கோபால் பந்து



ராஜா கிருஷ்ணசந்திரரின் தர்பாரில் ஆஸ்தான விகடகவி கோபால் பந்து. ஒரு நாள் ராஜா மிகவும் கவலைப் பட்டுக் கொண்டிருந்ததைக் கண்ட கோபால் என்ன விஷயம் என்று கேட்கவே, ராஜாவும் ''எல்லாம் நவாப் தரும் தொல்லை தான்'' என்றார். ''அப்படியா? விஷயத்தைச் சொல்லுங்கள். நான் உதவுகிறேன்'' என்றார் கோபால்.

ராஜாவும் ''ஒரு முனையிலிருந்து மறுமுனைவரை உலகின் நீளம் என்ன என்றும் ஆகாயத்தில் எவ்வளவு நட்சத்திரங்கள் உள்ளன என்றும் கணக்கிட்டு நவாபிற்குக் கூற வேண்டும். இது தான் பிரச்சினை'' என்றார். கோபாலும் ''பூ! இவ்வளவு தானா? அவரிடம் ஒரு லட்சம் ரூபாயும் ஒரு வருட அவகாசமும் கேளுங்கள்'' என்றார்.





ராஜா துணிவுடன் சென்று நவாபைக் கண்டு தனக்கு வேண்டியதைக் கேட்கவே, நவாபும் ''லட்சம் ரூபாய் கொடுக்கிறேன். ஆனால் ஒரு வருட அவகாசம் எதற்கு?'' எனக் கேட்டார். ராஜாவும் ''பூமியை இரவிலும் பகலிலும் அளக்க முடியும். ஆனால் நட்சத்திரங்கள் இரவில் மட்டும் தானே தென்படுகின்றன'' என்றார்.

ராஜா புன்னகை புரிந்தவாறே கோபாலிடம் ''இதோ நீ கேட்ட லட்சம் ரூபாய். ஆனால் உண்மையிலேயே இந்த வேலைகளை உங்களால் செய்ய முடியுமா?'' என்று கேட்டார். கோபாலும் ''கவலைப்படாதீர்கள். ஒரு வருடத்திற்குப்பின் வந்து பார்க்கிறேன்'' என்று கூறிப் பணத்தை வாங்கிக் கொண்டு போனார்.





கோபால் ஒரு வருடத்தை வெகு சுகமாகக் கழித்தார். விகடகவி ஏன் தர்பாருக்கு வரவில்லை என்று எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். கோபாலும் ''அரசர் எனக்கு ஒரு முக்கிய வேலையைக் கொடுத்திருக்கிறார். அதைச் செய்து முடித்து விட்டு வருவேன்'' என எல்லோரிடமும் கூறினார்.



ஒரு வருடம் முடிந்ததும் கோபால் ராஜாவை கண்டு ''வேலைகள் முடிந்து விட்டன. பூமியை அளந்து விட்டேன். நட்சத்திரங்களை எண்ணி விட்டேன். இனி நாம் போய் நவாபைப் பார்க்கலாம்'' என்றார்.



ராஜா பல்லக்கில் அமர்ந்து செல்ல, கோபால் நடந்து சென்றார். அவர் பின்னால் பத்து மாட்டு வண்டிகளில் மெல்லிய நூல் கட்டுகள் சென்றன. ரோமங்கள் அடர்ந்த பத்து ஆடுகளும் சென்றன.



ராஜாவும் நவாபிடம் ''இவர் கோபால். நீங்கள் கூறிய வேலைகளைச் செய்து முடித்து விட்டவர்'' என்றார். கோபாலும் ''பூமியின் நீளம் இந்த வண்டிகளிலுள்ள நூல் கட்டுகளின் மொத்த நீளம். இந்தப் பத்து ஆடுகளின் உடல்களில் எவ்வளவு ரோமங்கள் உள்ளனவோ, அவ்வளவு நட்சத்திரங்கள் ஆகாயத்தில் உள்ளன.'' என்றார். ராஜாவும் நவாப்பும் அது கேட்டு திகைத்துப் போனார்கள்.

## இந்திய நடனங்கள்

# மயக்கும் மணிப்புரி




மணிப்பூருக்கு நடனமே தான் வாழ்க்கை எனலாம். வெகு காலத்திற்கு முன் கந்தர்வர்கள் இங்கு வாழ்ந்தார்களாம். அவர்கள் நடனக்கலையில் தேர்ந்தவர்களாதலால் அப்பகுதியில் வாழ்ந்து வரும் மக்களுக்கும் அந் நடனக்கலை மீது ஒரு பிடிப்பு ஏற்பட்டு விட்டது எனக் கூறலாம். வடகிழக்கு இந்தியாவிலுள்ள மணிப்பூர் பெயருக்கேற்ப மணியான இடமே. இந்த இடத்து நடனக்கலை நவரத்தினங்களில் ஒன்றாக ஒளி விட்டு மிளிர்கிறது.

மணிப்புரி நடனத்தில் சீனர்களின் முறைகளும் கலந்திருப்பதைக் காணலாம். சீனர்கள் இப் பள்ளத்தாக்கின் மீது கி.பி 700ல் படையெடுத்து வந்தார்கள். அவர்கள் இப்பகுதியிலேயே குடியேறி இங்குள்ள பெண்களை மணந்து கொண்டு வாழத் தொடங்கி விட்டார்கள். இதனால் இந்தோ மங்கோலிய இனம் என்பது தோன்றியது.

இந்த நடனக்கலை மிகப் பழமையானது என்றாலும் கவியரசர் குருதேவ் ரவீந்திரநாத டாகுர்தான் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் பிரபலமடையச் செய்தார். 1920ல் மாச்சிம்



பூரில் நடந்த இந்த நடனத்தைக் கண்ட அவர் இதனைத் தாம் நிறுவிய சாந்தி நிகேதனத்தில் ஒரு கலையாகக் கற்பிக்க ஏற்பாடு செய்தார்.

மணிப்புரி நடனத்தில் பழங்கால, தற்கால, நாட்டுப்புறநடனங்கள் எல் லாம் தெய்வபக்தியை அடிப்படை யாகக் கொண்டவை.

பெரும்பாலும் அவை ராதையும் கிருஷ்ணரும் புரியும் ராஸலீலை களைக் கொண்டவை. மணிப்புரி நடனத்தில் ஒருவர் மட்டும் ஆடுவ தோடு நில்லாமல் கூட்டாகப் பலரும் ஆடுவதையும் காணலாம். திருவிழாக் களிலும், டோல் ஜாத்ராவின் போதி லும் ஹோலியின் போதும் இம் மாதிரிக்கூட்டு நடனங்கள் நடை பெறுகின்றன. அவற்றில் ஆண்களும் பெண்களும் ஆடுகிறார்கள். ராகௌல் நடனம் என்பது சிறுவர் களால் செய்யப்படுகிறது. கிருஷ்ண ரும் அவரது சகாக்களும் புரிந்த விளை யாடல்களை இவர்கள் நடனமாடிக் காட்டுகிறார்கள். வண்ணஆடைகள் அணிந்து இவர்கள் நடனமாடுவது கண்கவர் காட்சியாக இருக்கும்.

வய்ஹரோபா என்ற கூட்டு நடனத்தில் கம்பா-தோவ்பி கதையை நடித்துக்காட்டுகிறார்கள். இது லைலா-மஜ்னு கதையைப் போன் றது. சிறுவர்கள் ஆடும் மணிப்புரி நடனம் விருவிருப்பாக இருக்கும். அவர்கள் வேகமாகக் குதித்து எழுந்து ஓடி ஆடுவது வியப்பையே அளிக் கும். இதற்கு கோல் எனப்படும் முரசு போன்ற வாத்தியத்தைப் பயன்படுத்து கிறார்கள். இனிய குரல் பாட்டுடன் கோல், ஜால்ரா, பேனா என்பன போன்ற இசைக் கருவிகள் பயன்படுத் தப்படுகின்றன. பேனா என்பது நம் மூர் துந்தனா போன்ற இசைக் கருவி. இசை மெல்லியதாக ஆரம்பித்து வேக மாகவும் உச்சஸ்தாயியிலும் இசைக் கப்படுகிறது. மணிப்புரி நடனச் சிறு வர்கள் நடனமாடுகையில் கஞ்ஜ னியோ, கோலையோ ஜால்ரா வையோ கையில் வைத்துத் தட்டிக் கொண்டே ஆடுகிறார்கள்.

ஓரயோன் கூட்டத்தவர் கூறும் ஒரு கதை

# குள்ளநரியின் குயுக்தி!

அவர்களது உறைவிடம்

ஓரயோன்கள் மத்திய இந்தியாவில் பீஹார், மத்தியப்பிரதேசம், சத்தீஸ்கட், ஜார்க்கண்டு, ஒரிஸ்ஸா, மகாராஷ்டிரம் ஆகிய மாநிலங் களில் இருக்கிறார்கள். இவர்கள் முன்பு தென் கொங்கணக் கடற் கரைப் பகுதியில் இருந்தவர்களென்றும் மக்கள் தொகை அதிகமானதால் இடம் பெயர்ந்து இந்தியாவின் மற்ற பிராந்தியங்களுக்குச் சென்றார்களெனவும் கூறப்படுகிறது. இவர்கள் திராவிட இனத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுகிறார்கள்.

ஜீத் என்ற ஓரயோன் இளைஞன் ஒரு ஆற்றின் கரையில் ஆடிப்பாடிய வாறே சென்று கொண்டிருந்தான். அவன் எதிர்க்கரையிலுள்ள தன் மாமனார் இருக்கும் பஸ்திக்குப் போயாக வேண்டும். அவன் தன் ஐந்து வயது மகனையும், தன் மனைவி கர்மியையும் முன்னதாகவே அங்கு அனுப்பி இருந்தான். இப்போது அவன் தன் மைத்துனனின் குழந்தையின் சேஹாத்தியில் கலந்து கொள்ளவே சென்று கொண்டிருந்தான். அப்



போது ஒரு ராட்சஸ ஆமை கரையில் மெதுவாக ஊர்ந்து போய்க் கொண்டு இருப்பதைக் கண்டான்.

'ஆ! எப்படிக்கொழுத்திருக்கிறது!' என்று கூறியவாறே அவன் அதன் மீது பாய்ந்து கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். இதைக் கொண்டு போய் என் மாமனாருக்குப் பரிசாக அளிக்கிறேன்'' என அவன் எண்ணி னான். அவன் தன் பஸ்தியைக் கடந்து சர்ணாகாட்டை அடைந்தான். அங்கி ருந்து நதிக்கரையில் படகுத்துறையை அடைந்தான். ஆனால் ஆற்றில் பெருக்கெடுத்து வந்த வெள்ளத்தைப் பார்த்து மலைத்து நின்றான்.

அதைக் கண்ட ஜீத் ''இந்த ஆற்று வெள்ளத்தில் நான் எப்படி எதிர்க் கரைக்குப் போக முடியும்? வெள்ளம் இல்லாதிருந்தால் ஆற்றில் இறங்கி நடந்தே போய் மறுகரையை அடைந்து விடுவேன். ஆனால் இப் போது என்ன செய்வது?'' என்று தவிக்கலானான். அப்போது அவனுக்கு ஒரு வழி தோன்றியது.

அவன் தான் எடுத்து வந்த ஆமை யிடம் ''ஆமையே! நீ எனக்கு ஒரு உதவி செய்கிறாயா? ஆற்றில் ஒரே வெள்ளமாக இருக்கிறது. நான் எதிர்க் கரைக்குச் சென்றாக வேண்டும். என்னை அங்கே கொண்டு போய் விட்டு விடுகிறாயா?'' என்று குழைந்தவாறே கேட்டான்.

ஆமையும் ''மனிதன் தான் தனக்கு ஏதாவது வேண்டுமென்றால் எப்படிக் குழைகிறான்! நான் இவனுக்கு உதவி செய்ய ஒரு நிபந்தனை விதிக்கிறேன்''

### இவர்கள் மொழி

இவர்கள் குருக் என்ற மொழி யைப் பேசுகிறார்கள். ஆனால் பல ஆண்டுகளாக இவர்கள் ஆர்ய, திரா விட மொழிகளின் பல வட்டாரப் பேச்சுகளைக் கலந்து பேசி வரு கிறார்கள். இப்போது இவர்கள் பேசும் மொழியின் பெயர் சத்ரி.

என மனதிற்குள் கூறிக் கொண்டது.

ஆமை அவனிடம் ''நான் உன்னை எதிர்க்கரையில் கொண்டு போய் விடு கிறேன். ஆனால் நீ எனக்கு ஒரு வாக்குறுதி கொடுக்க வேண்டும். எதிர்க்கரையை அடைந்ததும் நீ என்னை விட்டு விடவேண்டும். சம் மதமா?'' என்று கேட்டது. ஜீத்துவும் அவ்வாறே செய்வதாகக் கூறினான்.

ஜீத்தும் ஆமையிடம் ''உன்னைப் போன்ற ஒரு பிராணியால் எனக்கு





### அந்த மக்கள்

இந்தக் கூட்டத்தவர் அதிக உயரமோ குட்டையாக இராமல் நடுத்தர உயரமான வர்கள். கருப்பாகவும் தலை குறுகலாகவும் உள்ளவர்கள். சப்பை மூக்கும் கட்டு மஸ் தான உடலும் கொண்டவர்கள். பெண்கள் கூரிய பார்வையும் எடுப்பான தோற்றமும் உண்டயவர்கள் இவர்கள் மிக அழகாக நடனம் புரிகிறார்கள்.

என்ன பயன்? நான் எதிர்க்கரையை அடைந்ததும் உன்னைவிட்டு விடுகி றேன். திருப்தி தானே'' எனக் கூறினான்.

ஆமையும் இந்த பதிலால் திருப்தி அடைந்து ஆற்றில் குதித்து மிதக்கவே ஜீத் அதன் முதுகில் உட்கார்ந்து கொண்டான். ஆமையும் அவனோடு எதிர்க்கரையை அடைந்தது.

ஜீத் ஆமை மீதிருந்து சட்டெனக் கரையில் குதித்தான். பிறகு அந்த ஆமையைப் பார்த்தவாறே தன் மன திற்குள் ''இந்தக் கொழுத்த ஆமையை நான் என்றாவது பிடித்துக்கொன்று இதன் மாமிசத்தைச் சுவைப்பேன்'' என்று எண்ணினான். அதன் பின் அவன் தன் மாமனாரின் வீட்டிற்குச் செல்ல, ஆமையும் தன் வழியே சென்றது.

ஜீத்திற்கு அவனது மாமனார் வீட் டில் நன்கு பொழுது போயிற்று. நல்ல விருந்து சாப்பாடு கிடைத்தது. மீனும், குடிக்க ஹரியாவும் மோஹவாவும் கிடைத்தன. இரவு முழுவதும் ஆட் டத்திலும் பாட்டிலும் அவன் கலந்து கொண்டான். மாந்தர் லோஹாதி, நகேரா ஆகிய வாத்தியங்கள் முழங் கின. கர்மியும் மற்ற பெண்களும் நகரிமிட்டியை உடலில் தேய்த்துக் குளித்து அழகுற இருந்தார்கள்.

ஜீத் தன் ஊருக்குத்திரும்பிப் போக ஆற்றங்கரைக்கு வந்தான். அவ னோடு அவன் மனைவியும் மகனும் வரவில்லை. அவர்கள் மேலும் சில நாட்கள் அவ்வூரில் இருக்க விரும்பி யதே அதற்குக் காரணம். ஜீத் ஆற்றங் கரையில் உல்லாசமாகப் பாடிக் கொண்டே அங்குமிங்கும் நடந்தான்.

அப்போது அவன் ஆற்றில் வெள்ளப்பெருக்கு வடியாமல் முன் போலவே இருப்பதைக் கண்டு திகைத்தான். அவன் சுற்றிலும் பார்க் கையில் தான் முன்பு ஆற்றைக்கடக்க உதவிய கொழுத்த ஆமையைக் கண்டான்.

உடனே அவன் ''ஆகா! என்ன என் அதிர்ஷ்டம்!! உன்னை மறுபடியும் சந்திக்கிறேனே!!! என்றான்.

ஆமை அவனைப் பார்த்துத் திடுக் கிட்டு அவனைப் பார்க்காததுபோல இருந்தது. ஜீத்தோ ''ஆமையே! இம்முறையும் இக்கரையிலிருந்து



என்னை அக்கரைக்குக் கொண்டு போய்விட்டு விடுகிறாயா?'' என்று கேட்டான். ஆமையும் சம்மதம் என்பதற்குத் தலையை ஆட்டியது.

ஜீத் ஆமையின் முதுகின் மீது உட்கார்ந்து கொள்ள, அது ஆற்றில் சென்றது. ஆற்றில் செல்லும் போது இருவரும் எதுவும் பேசவில்லை. நடு ஆற்றை அடைந்ததும் ஆமை ''இப் போது நீ என்ன நினைத்துக் கொண்டி ருக்கிறாய்?'' என்று கேட்டது.

ஒரு ஆற்றைக் கடக்கும் போது பொய் சொல்லக் கூடாது என்பது ஓரயோன்கள் கடைப்பிடிக்கும் வழி முறையாகும். அச்சமயத்தில் பொய் பேசினால் அவன் ஆற்றில் விழுந்து மூழ்கி இறந்து போவான் என்பது அவர்களது நம்பிக்கை.

இதனால் ஜீத் ஆமையிடம் ''நான் உன்னை என் வீட்டிற்குக் கொண்டு போய் அறுத்து வேக வைத்து உண் ணப்போகிறேன்'' என்றான்.

ஆமை யும் ''இந்த மாதிரித்தான் நீ நினைப்பாய் என்று நான் எதிர்ப் பார்த்தது தான். அது சரி. இப்போது நான் என்ன நினைக்கிறேன் என்று நீ என்னைக் கேட்கவில்லையே?'' என்று குறும்பாகச் சிரித்துக் கொண்டே கேட்டது. ஜீத்தும் ''அப்படி என்ன தான் நினைக்கிறாய்? சொல்'' என்று கேட்டான்.

ஆமையும் ''நான் உன்னை பத்திர மாக அக்கரைக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பதாக வாக்களிக்கவில்லை அத னால் இந்த நடு ஆற்றில் உன்னை மூழ்க வைத்து சாகடிக்கப் போகி றேன்'' என்றது.

ஜீத்தோ ''ஐயோ வேண்டாம்.

**அவர்களது தொழில்**

ஓரயோன்கள் விவசாயிகளே. அவர்களுக்குப் பயிர்களைப் பற்றி யும் கால்நடைகளைப் பற்றியும் நன்கு தெரியும். அவர்களுக்கு விஷச் செடிகள், கிருமிகள் பற்றி எல்லாம் தெரியும். வேட்டையாடுவதும் இவர் களது தொழில்களில் ஒன்றாகும். விவசாயத்தோடு இதையும் சிலர் செய்கிறார்கள்.



அப்படிச் செய்து விடாதே'' என்று அலறினான். ஆமையோ ''நீ என்னை உன் வீட்டிற்குக் கொண்டு போய்க் கொன்று உண்ண நினைத்தாய். அதற்காகத்தான் நான் உன்னை



ஆற்றில் மூழ்கடித்து இப்போதே கொல்லப்போகிறேன்'' என்றது.

அப்போது ஜீத் தான் போய்ச் சேர வேண்டிய எதிர்க்கரையில் ஒரு குள்ள நரி இருப்பதைக் கண்டான். அவன் ஆமையிடம் ''நம் தகராறை அந்தக் குள்ள நரியிடம் கூறி அது கூறும் தீர்ப்பை நாம் ஏற்போம்'' என்றான். ஆமையோ ''முதலில் நீ என்னைக் கொல்ல நினைத்தது நியாயம் தானா என்று அதனிடம் கேட்டுச் சொல்'' என்று உரக்கக்கத்தியது. இவ்வாறு இருவரும் சச்சரவு செய்வதைக் கண்ட குள்ளநரி ''நீங்கள் நடு ஆற்றில் இருந்து கொண்டு ஏன் கத்துகிறீர்கள்? அமைதியாக இருந்து விஷயம் என்ன என்று பொறுமையுடன் சொல்லுங்கள்'' என்றது. ஆமையும் தான் இருந்த இடத்திலிருந்தே தனக்கும் ஜீத்திற்குமுள்ள தகராறு பற்றிக் கூறியது.

குள்ளநரியோ ''எனக்கு எதுவுமே கேட்கவில்லை. கொஞ்சம் என் பக்

### அவர்களது நம்பிக்கைகள்

ஒரயோன்கள் ஆவிகள், பேய் பிசாசுகள், மந்திரதந்திரங்களில் நம்பிக்கை கொண்டவர்கள். அவர்கள் நம்புவதில் சில இவையாம்.

* ஒரு வேட்டைக்காரன் தான் ஒரு பெண்ணை மணந்து வீட்டிற்கு அழைத்து வருவதாகக் கனவு கண்டால் அவன் கண்டிப்பாக வேட்டையாடி ஒரு மானைக் கொல்வானாம். அவன் ஒரு மிருகத்தைக் கொன்றதாகக் கனவு கண்டால் அவன் விரைவில் கொல்லப்படுவானாம்.

* காலிக் குடத்துடன் ஒரு பெண் ஒரு



வேட்டைக்காரனின் முன் வந்தால் அது அபசகுனமாம். நிறை குடத்துடன் வரும் பெண்ணை அவன் கண்டால் அது நல்ல சகுனமாம்.

* ஒரு அம்பு குள்ளநரி மீது குறிவைக்கப்பட்டாலோ அல்லது ஒரு அம்பை ஒரு பெண் மிதித்து விட்டாலோ அந்த அம்பு பயனற்றதாகி விடுமாம்.

கத்தில் வந்து தகராறு என்ன என்று இருவரும் சொல்லுங்கள்'' என்றது. ஆமையும் ஜீத்தைச் சுமந்து கொண்டு வேகமாக நீந்திச் சென்று குள்ளநரி இருந்த இடத்தை அடைந்தது. ஜீத் தன் தரப்பு வாதத்தைக் கூற முயன்றான். அப்போது குள்ள நரி ''அட வடி கட்டின முட்டாளே! சட்டெனக் குதித்து ஓடி விடு'' எனக்கத்தவே ஜீத்தும் ஆமையின் முதுகிலிருந்து கரையில் குதித்து ஓடிவிட்டான். அப்போது குள்ளநரி ஆமையிடம் ''நீ இன்னமும் ஏன் நிற்கிறாய்? அவன் தான் போய் விட்டானே. இன்னமும் நீ இங்கே ஏன் இருக்கிறாய்? நீ ஆற்றில் நீந்தித்தப்பிப் போய்விடு'' என்றது.

ஆமையும் அவ்வாறே செய்தது. இது தான் குள்ளநரி செய்த குயுக்தி!



## சொல்லகராதி

பஸ்தி: பல வீடுகள் கொண்ட குடியிருப்பு.

சேஹாத்தி: குழந்தை பிறந்த ஆறாவது நாள் கொண்டாடுவது. அன்று பேலுவா இலைகளை குழந்தையருகே வைப்பார்கள். அது குழந்தையின் உடலை வருத்தி பிற்கால வாழ்வில் உடலில் நோயை எதிர்க்கும் சக்தியைத் தரும் என்பது அவர்களது நம்பிக்கை.

சர்னா: சாலமரம்

ஹரியா: சாதத்தைப்புளிக்க வைத்து தயாரிக்கப்படும் பானம். வீட்டு விசேஷங்களில் விருந்தினர் பருகக் கொடுக்கப்படுவது.

மோஹாவா: மோஹாவா மலர்களிலிருந்து எடுக்கப்படும் விதைகளால் தயாரிக்கப்படும் பானம்.

மாந்தர்: மரத்தாலோ அல்லது களிமண்ணாலோ செய்யப்படும் முரசு போன்றது.

லோஹாதி நகாரா: இன்னொரு வகை முரசு.

நகரி மிட்டி: கருப்பு நிற மண். உடலில் தேய்த்து குளிக்கப்பயன்படுவது. மிகவும் மிருதுவானது.

# வெந்த முட்டைகளும் சுண்டல்கடலையும்

அவ்வூரில் தொடர்ந்து மூன்று ஆண்டுகளாக மழை பெய்ய வில்லை. விவசாயம் செய்ய முடிய வில்லை. வயல்கள் வெடித்துப் பாளங்கலாகி விட்டன. சிறிதளவு நிலம் வைத்திருந்த அஜீஸ் என்ன செய்வான்? தன் நிலத்தை அவன் மீர் சந்திற்கு விற்று விட்டு ஊரைவிட்டே போக ஏற்பாடுகளைச் செய்தான். மீர்சந்து அவன் மீது இரக்கப்பட்டு ''அஜீஸ்! நீ பட்டினியுடனா போகப் போகிறாய்?'' என்று கேட்டான்.

அஜீஸும் ''மீர்சந்து! உன் கடையி லிருந்து பன்னிரெண்டு வெந்த முட்டைகளைக் கடனாகக் கொடு, நான் நல்ல விதமாய்த் திரும்பி வந்ததும் உன் கடனை அடைத்து விடுகிறேன்'' என்றான்.

மீர்சந்தும் ''சரி சரி. இது வராத



கடன்தான். வாங்கிக் கொண்டு போ'' எனக் கூறி வெந்த முட்டைகளைக் கொடுத்து அவனை அனுப்பினான்.

ஊரைவிட்டுப் போன அஜீஸ் ஏழையாகவே இருந்து விடவில்லை. எட்டு வருடங்கள் கழித்து பெரும் பணக்காரனாகத் தன் ஊருக்குத் திரும்பி வந்தான். வசிக்கப் பெரிய வீடாக வாங்கினான். பல வயல்களை விலைக்கு வாங்கிப்போட்டான். வீட்டு வேலைக்கு வேலைக்காரர் களை அமர்த்திக் கொண்டான்.

ஒரு நாள் மீர்சந்து அஜீஸின் வீட்டிற்குப் போய் ''ஏய் அஜீஸ்! என்னிடமிருந்து எட்டு வருஷங் களுக்கு முன் பன்னிரண்டு வெந்த முட்டைகளைக் கடன் சொல்லி வாங்கிக் கொண்டு போனாயே. இப் போது அதன் விலையும் வட்டியும் சேர்ந்து ஆயிரம் பவுன் ஆகிறது. எடு பணத்தை'' என்று மிடுக்காகக் கேட்டான்.

அஜீஸோ ''பன்னிரண்டு வெந்த முட்டைகளுக்கு ஆயிரம் பவுனா! வேண்டுமானால் பன்னிரண்டு ரூபாய் கொடுக்கிறேன். வாங்கிக் கொண்டு போ'' என்றான்.

மீர்சந்தோ ''அதெல்லாம் முடி யாது. ஆயிரம் பவுன் கொடுக்கப் போகிறாயா அல்லது நாளைக்கு நீதிமன்றத்திற்கு வந்து பணத்தைக்

கக்கப் போகிறாயா?'' என்று உறுமினான்.

அஜீஸும் ''நீ மிரட்டி விட்டால் உடனே நான் பணத்தைக் கொடுத்து விடுவேன் என்று நினைக்கிறாயா? முடியாது. நான் கொடுக்க மாட்டேன். அங்கேயே நாளை நான் சந்திக்கிறேன். போ, போ'' என்று கூறி அனுப்பி விட்டான்.

மறுநாள் மீர்சந்து நீதிபதியிடம் ''நான் எட்டு வருடங்களுக்கு முன் பன்னிரண்டு வெந்த முட்டைகளை அஜீஸிற்குக் கடனாகக் கொடுத்தேன் அவை மட்டும் என்னிடமே இருந்திருந்தால் குஞ்சுகள் அவற்றிலிருந்து வெளி வந்து அவ்வப்போது வம்ச விருத்தி செய்திருக்கும் அதனால் ஆயிரம் பவுன்கள் கிடைத்திருக்கும் என்று சொன்னான். அஜீஸ் முட்டைகளைக் கடனாக வாங்கிக் கொண்டதால் அதன் விலையும் வட்டியுமாக தனக்கு ஆயிரம் பவுன் கொடுக்க வேண்டும் என்றும் அவன் அத்தொகையைக் கொடுக்க மறுப்பதால் அவன் மீது வழக்குப்போட வந்து இருப்பதாகக் கூறினான்.

நீதிபதியும் ''சரி, அஜீஸ் வரட்டும். அவனிடமும் விசாரித்து விட்டுத் தீர்ப்பைக் கூறுகிறேன்'' என்றார்.

அஜீஸ் நீதிமன்றத்திற்குச் சற்றுத் தாமதமாக வந்தான். நீதிபதி தாமதத்தின் காரணத்தைக் கேட்கவே, அவனும் ''நான் என் சமையல்காரனிடம் கொண்டைக்கடலையை வேக



வைத்து சுண்டல் போட்டுக் கொண்டு வரச் சொன்னேன். அது வந்ததும் அக்கடலைகளைத் தோட்டத்தில் குழி செய்து அதில் போட்டு முளைக்க விட்டு விட்டு வந்தேன். ''அவை முளைத்து கடலை கிடைத்ததும், அதை விற்று இவரது கடனை அடைத்து விடுகிறேன்'' என்றான்.

அதைக் கேட்ட மீர்சந்து பலமாகச் சிரித்து ''இவன் சொல்வதைக் கேட்டீர்களா? உளறுகிறான் பாருங்கள். எங்காவது வேக வைத்த கொண்டைக் கடலை முளைக்குமா?'' என்று கேட்டான்.

அப்போது அஜீஸ் ''வேக வைத்த முட்டைகளி லிருந்து குஞ்சுகள் வரும் என்றால் வேக வைத்த கொண்டைக் கடலை ஏன் முளைக்காது?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட நீதிபதி சிரித்தவாறே மீர்சந்தின் வழக்கைத் தள்ளுபடி செய்தார்.

# செய்திச்சுடர்

## வயது: 12,500,000,000 ஆண்டுகள்!

பூமண்டலத்தின் வயது மேலே குறிப்பிட்டது தான். இதை உலகின் எல்லா விஞ்ஞானிகளும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். இதை எப்ப டிக் கண்டறிந்தார்கள்? ஆராய்ச்சியா ளர்கள் இது பற்றி ஆய்வு செய்து கொண்டிருந்த போது தற்செயலாக ஒரு பழைய நட்சத்திரத்தில் யுரேனிய ஓட்டம் இருப்பதை அறிந்தார்கள். அவர்கள் 'ரேடியோ ஆக்டிவ்க்ரோச னோமெட்ரி' என்ற அப்பழுக்கற்ற முறையைப் பயன்படுத்தினார்கள். அவர்கள் தேர்ந் தெடுத்த நட்சத்திரம் சி.எஸ் 31082-001. இதைத் தென் அமெரிக்காவில் சில்லி நாட்டிலுள்ள பாராநெல்லிலிருக்கும் மாபெரும் தொலை நோக்கியால் ஆய்வு செய்து இந்த நட்சத்திரத்தில் யுரேனியம் இருப்பது கண்டு பிடிக்கப் பட்டது. இதன் வாயிலாகவே பூமண் டத்தின் வயதை நிர்ணயிக்க முடிந்தது.





## செவ்வாய்கிரகத்தில் உயிரினம்

ஹங்கேரி நாட்டு விஞ்ஞானிகள் செவ்வாய்கிரகத்தில் உயிரினங்கள் இருப்பதற்கான தடயங்கள் கிடைத்தி ருப்பதாகக் கூறுகிறார்கள். அதில் எடுக்கப்பட்ட 60,000 புகைப்படங் களைப் பரிசோதித்த பின் அவர்கள் இந்த முடிவிற்கு வந்திருக்கிறார்கள். பூமியில் வாழும் உயிரினங்களின் கால்சுவடுகள் போலவே செவ்வாய் கிரகத்தின் தென்பகுதியில் காணப்படுகின்றனவாம்.

## 'அமெரிக்கா' என்ற பெயர்

அமெரிக்காவை கொலம்பஸ் 1492ல் அடைந்ததாகப்பொதுவாகக் கூறப்பட்டாலும் அவர் அடைந்தது சான்சல்வடாரையே. அமெரிக்கா என்ற பெயர் முதலில் கி.பி 1507ல் வரையப்பட்ட வரைபடத்தில் தான் காணப்பட்டது. வெஸ்புசி என்பவர் கி.பி 1501.02ல் அப்பகுதியில் ஓரிடத்தில் இறங்கி அது தனிக்கண்டம் என அறிந்து கொண்டார். வரைபடக் கலைஞர் மார்டின் முல்லர் தான் இதனை அமெரிக்கா எனக் குறிப்பிட்டார். இந்த வரைபடத்தை அமெரிக்காவின் லைப்பரரி காங்கிரஸ் 10,000,000 டாலர்கள் விலை கொடுத்து வாங்கியது.





## லாட்டரி யோகம்!

ஜெர்மனியின் ஃபிராங்க ஃபர்டின் வேலை எதுவும் கிடைக்காத 50 வயதுப் பெண்மணி தான் சாப்பிடக்கூட செலவு செய்யாமல் தன்னிடமிருந்த சொற்பப் பணத்தில் செப்டம்பர் முதல் தேதியன்று ஒரு லாட்டரி சீட்டு வாங்கினாள். அந்தச் சீட்டிற்கு 10,000,000 அமெரிக்கா டாலர்கள் பரிசாகக் கிடைத்தன. அது அவளது அதிர்ஷ்டம். அது போல் எல்லா லாட்டரி சீட்டுகளுக்கும் பரிசு கிடைத்துவிடுமா என்ன?



# நம் இந்தியா

## வினாக்கள்

**இம்மாதத்து வினாக்களில் எவ்வளவுக்கு உங்களால் விடை கூறமுடியும் என்று பாருங்கள்.**

1. இந்தியா 100 கோடி மக்கள் தொகையை எந்த நாளில் அடைந்தது?
2. உலகின் மிக உயரமான மலைச் சிகரம் எவரெஸ்ட் நேபாள-திபெத் எல்லையில் உள்ளது. இந்தியாவிலுள்ள மிக உயர்ந்த மலைச் சிகரம் எது? அதன் உயரம் என்ன?
3. பஞ்சாப் என்ற பெயரை அந்த மாநிலத்திற்குக் கொடுத்த ஐந்து நதிகளின் பெயர் என்ன?
4. சென்ற ஆண்டில் எந்த மூன்று மாநிலங்கள் உருவாயின? அவற்றையும் அவற்றின் தலைநகரங்களையும் கூறவும்.
5. சுதந்திரத்திற்குப்பின் எந்த மாநிலத்தில் இரு பெண் முதலமைச்சர்கள் ஆட்சி புரிந்தனர். அவர்கள் யாவர்?

(விடைகள் அடுத்த மாதம்)

## அக்டோபர் மாத வினாக்களின் விடைகள்

1. ஓணம் கேரளாவில் கொண்டாடப்படுவது. மகாபலி சக்கரவர்த்தி அன்று அம்மாநிலத்திற்கு விஜயம் செய்கிறாராம்.
2. தீபாவளி, நவம்பர் 14ல்
3. விஜயதசமி, நவராத்திரிக்கு அடுத்த நாள்.
4. ரக்ஷாபந்தன் அல்லது பாயீதூஜ்
5. கோர்பத் சால், ஜருதுஷ்ட்ராவின் பிறந்த நாள்.
6. ஈத் அல்லது மிலாட்-உல்-நபி எனப்படுவது.
7. ஈஸ்டர், ஏசுசிலுவையில் அறையப்பட்டபின் திரும்ப உயிருடன் வந்த நாள்.
8. புத்தர் இந்தப் பௌர்ணமியன்று பிறந்தார். ஒரு பௌர்ணமியன்று 'ஞானம்' பெற்றார். வேறொரு பௌர்ணமியன்று நிர்வாணமுக்தி அடைந்தார்.
9. பொங்கல்
10. சபரிமலை ஐயப்பன் கோவிலில் இங்கிருந்து பக்தர்கள் ஒரு தெய்வீக ஒளியை ஆகாயத்தில் சில விநாடிகளுக்குப் பார்க்கிறார்கள்.

## நவம்பர் மாத வினாக்களின் விடைகள்

1. துருவன்-உத்தானபாத மன்னர்
2. மார்க்கண்டேயர்-மிருகண்டு
3. பிரகலாதன்- விஷ்ணுபகவான்
4. நிசிகேதன்- வாஜசிரவஸ்
5. எகலவ்யன்-கௌரவர்களும் பாண்டவர்களும்
6. பரதன்-துஷ்யந்த மன்னன்.

# பாரதப் பண்பாடு- வரலாறு

ஒரு உயரிய நாகரீகத்தின் நிகழ்ச்சிகள்.
பரம்பரை பரம்பரையாக உண்மையைக் காண ஆய்வு

## 22–சீதையை அறிந்து கொள்ளுங்கள்



சேகரும் சியாமளாவும் உரத்த குரலில் ஏதோ தர்க்கம் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களது தாயார் அங்கு வந்து ''ஏன் இப்படிக் கத்துகிறீர்கள்? தாத்தா தூங்கிக் கொண்டிருக்கிறாரே, தெரியவில்லையா?'' எனக்கடிந்து கொண்டாள். அப்போது பேராசிரியர் சோமநாதரே அங்கு வந்து விட்டார்.

அவரிடம் சேகர் ''தாத்தா! என்னை பெய்ஜிங்கில் நடக்கப்போகும் ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொள்ளத் தேர்ந்தெடுத்தார்கள் என்று நான் கூறினால் நீங்கள் சிரிப்பீர்களா?'' என்று கேட்டான்.

அவரும் ''சிரிக்கவே மாட்டேன். ஏனென்றால் நானும் ஒலிம்பிக் போட்டிகளில் குத்துச் சண்டை போட்டு வெற்றி பெறுவேன்'' என்று சிரித்துக் கொண்டே கூறினார்.

அப்போது சேகர் ''இந்த நோஞ்சான் சியாமளா ஜான்சிராணி லட்சுமி பாயாக நடிக்கப்போகிறாளாம். கொஞ்சம் கூடப் பொருத்தமாக இராதே'' என்று கைகொட்டிச் சிரித்தான். அப்போது சோமநாதர் ''நம் சியாமளா லட்சுமிபாயாக நடிக்க ஏற்றவளா அல்லது இல்லையா யென்று நான் சொல்லப் போவதில்லை. ஆனால் ராணிலட்சுமி

பாரதீயன்



பாயைப் பற்றி உங்களுக்கு நான் சொல்லியாக வேண்டும். லட்சுமி பாய் சாதாரணப் பெண்கள் இருப்பது போலத்தான் இருந்தாள். பருமனாக வும் இருக்கவில்லை. பார்க்க பயங்கர மாகவும் இல்லை. அவளும் ஒடிச லாகத்தான் இருந்தாள். ஆனால் பிரிட்டிஷாரை எதிர்க்க வேண்டிய வேளை வந்த போது அவள் சிங்கம் போலச் சீறி துணிச்சலுடன் போர் புரிந்தாள். பெண்கள் தக்க சமயத்தில் தம் சக்தியைக் காட்டுகிறார்கள் என் பது கண்கூடு. உதாரணத்திற்கு ராமரின் மனைவி சீதையைக் கூறலாம்'' என்றார்.

அப்போது சேகரின் தாயார் ''நானே சீதை பற்றி உங்களிடம் கேட்க வேண்டும் என்றிருந்தேன். சீதைக்குத் தான் எவ்வளவு சிரமம்! அவள் எல்லா வற்றையும் சகித்துக் கொண்டாளே யொழிய ஒரு வீராங்கனை போல எதிர்த்துப்போராடவில்லையே. இது சரியா?'' என்று கேட்டாள்.

சோமநாதரும் ''சீதாதேவியைப் பற்றி தவறான கருத்துகள் நிலவுகின் றன. அவை சரியல்ல என்று நினைக் கிறேன். இப்போது உங்களிடம் சில கேள்விகளைக் கேட்கிறேன். பதில் சொல்கிறீர்களா?'' என்று கேட்டார். ''ஓ! பதில் சொல்கிறோமே'' என சேகரும், சியாமளாவும் அவர்களது தாயாரும் கூறினார்கள்.

சோமநாதரும் ''கைகேயின் வரத் தின்படி ராமர் ஒருவர் தானே காட்டிற் குப் போக வேண்டும்? சீதை போக வேண்டியதில்லைதானே'' என்று கேட்டார். ''அவள் போக வேண்டிய தில்லைதான்'' என்று சேகரும் சியா மளாவும் அவர்களது தாயாரும் கூறினார்கள்.

அப்போது அவர் ''சீதையை யாரா வது காட்டிற்குப் போகச் சொன்னார் களா? இல்லையே. அவளாகத்தானே வனவாசத்தை மேற் கொண்டாள்? பெரியவர்கள் காட்டில் அவள் பல கஷ்டங்களுக்கு ஆளாக வேண்டும் என்று கூறியும் அவள் பிடிவாதமாகக் காட்டிற்கு ராமருடன் சென்றாளே. இது ஏன் என்று யோசித்துப் பார்த்தீர் களா? மேலும் காட்டில் அவள் பொன் மானைப் பார்த்து அது தனக்கு வேண்டுமென்று பிடிவாதம் பிடித்த தால் தானே ராமர் அந்த மானைத் துரத்திக் கொண்டு பின் தொடர்ந்தார். அந்த மானாக உரு மாறி வந்த மாரீசன்

ராமரின் குரல் போல 'லட்சுமணா காப்பாற்று' எனக்கத்திய போது லட்சு மணன் ராமரின் உதவிக்குச் செல்ல வேண்டுமென்று வற்புறுத்தியது சீதை தான். சீதை அப்போது தனியாக இருக்க அஞ்சவில்லை. ராவணன் சன்னியாசி வேஷத்தில் வந்து பிச்சை கேட்ட போது சீதை தைரியமாக லட்சு மணன் கிழித்த கோட்டைத் தாண்டி வந்து ராவணனிடம் அகப்பட்டுக் கொண்டாள். இவற்றையெல்லாம் கூர்ந்து கவனித்துப் பார்த்தால் சீதை எதற்கும் அஞ்சவில்லை என்பது தெரியும். அவள் எந்த நிலையையும் சமாளிக்கத் துணிவு கொண்டவள் என்பதும் நன்கு தெரிகிறது'' என்று கூறிச் சற்று நிறுத்தினார்.



சேகரின் தாயாரும் ''ஆமாம். நீங்கள் சொல்வது சரியே. நான் இந்த விதமாய் சீதையைப் பற்றி நினைத் துப் பார்க்கவில்லை தான்'' என்றாள். அப்போது சோமநாதர் மேலும் தொடர்ந்து ''ராவணன் சீதையை அசோகவனத்தில் சிறை வைத்திருந்த போது ஹனுமார்அவளைக் கண்டு ''நான் உங்களை என் முதுகில் சுமந்து கொண்டு ராமரிடம் கொண்டு போய்ச் சேர்க்கிறேன்'' என்று கூறினாரல் லவா? அப்போது சீதை என்ன சொன்னாள்? ''இதற்கு நான் சம் மதிக்க மாட்டேன். ராவணன் என் னைக் கடத்திக் கொண்டு வந்து இங்கே சிறைப்படுத்தியிருக்கிறான். ராமரின் தூதனாக வந்த நீ என்னை ராவணனுக்குத் தெரியாமல் தூக்கிக் கொண்டு போவதாகக் கூறுகிறாயே. அப்படியானால் ராமருக்கும் ராவண னுக்கும் வித்தியாசமே இல்லை என்று தானே ஆகிறது. இது சரியல்ல. ராமர் வந்து ராவணனோடு போரிட்டு அவனை வென்று என்னை மீட்க வேண்டும்'' என்று உறுதிபடக் கூறி னாள். முடிவில் ராமர் சீதையை மீட்ட தும் சீதை தான் அக்கினியை வளர்த்து அதில் புகுந்து அந்த அக்கினிப்பரீட் சையில் தேர்ந்து காட்டினாள். இதற் கும் அவளுக்கு எவ்வளவு துணிச்ச லும் தைரியமும் இருந்திருக்க வேண் டும் என்பதை யோசித்துப் பாருங்கள். எந்த நிலையிலும் துணிவுடன் சீதை தான் முடிவு எடுத்து அவற்றின் விளை வுகளையும் தைரியமாக எதிர் கொண் டாள். எனவே சீதைப் பயந்து போய் பொறுமை காட்டினாள் என்று கூறுவது தவறு'' என விளக்கிக்

கூறினார். அப்போது சியாமளா ''தாத்தா! ராமாயண முடிவில் இரண்டாவது முறையாக சீதைக்குப் பரீட்சை வந்த போது அவள் அக்கினிப் பிரவேசம் செய்யாமல் ஏன் பூமிக்குள் சென்று விட்டாள்?'' என்று கேட்டாள்.

சோமநாதரும் ''அவளது இரண்டு பரீட்சைகளுக்கிடையே உள்ள வித்தியாசத்தைப் பாருங்கள். முதலாவது பரீட்சையில் சீதையே அக்கினியை வரவழைத்து அதில் பிரவேசித்து வெளிவந்து தான் பத்தரை மாற்றுத் தங்கம் என நிரூபித்தாள். இரண்டாவது பரீட்சையிலோ மற்றவர்கள் தீ மூட்டுவதாயும் அதில் அவள் பிரவேசம் செய்ய வேண்டுமென்று கூறினார்கள். பாமரமக்கள் கூட்டத்திற்கு தான் பரிசுத்தமானவள் என சீதை நிரூபிக்கத் தேவையே இல்லை. தான் இனி மக்களிடையே இருக்கத்தேவை இல்லை என்பதை அவள் உணர்ந்தாள். அவள் பிறந்ததே பூமியிலிருந்து தான் என்பது உங்களுக்குத் தெரியுமே. எனவே அவள் முடிவில் பூமிக்குள் சென்றது சரியே. உலகில் தீய சக்திகளை ராமர் ஒழிக்க அவள் எல்லா விதத்திலும் துணையாக இருந்தாள். அத்தீய சக்திகள் அழிந்ததும் அவளது நோக்கம் முழுமை அடைந்து விட்டது. ராமரோ தீய சக்திகளை அழித்த பின் நல்லாட்சி என்ன என்பதை உலகிற்குக் காட்டவேண்டும். ராமர் சீதை மறைந்த பின் உலகில் வாழ்ந்து ராம ராஜ்யம் என்றால் என்ன என்பதை உலகிற்குக் காட்டினார். ஆனால் ஒரு விஷயத்தை நான் குறிப்பிட்டே ஆக வேண்டும். ஆதிகாவியமாக வால்மீகி முனிவரால் எழுதப்பட்ட ராமாயணம் ராமர் அயோத்திக்குத் திரும்பி வந்து அவரது பட்டாபிஷேகம் நடந்ததோடு முடிவடைந்து விடுகிறது. அதற்குப்பின் பிறரால் எழுதப்பட்ட உத்தரகாண்டம் ஆதிகாவியமான வால்மீகி ராமாயணத்தின் ஒரு காண்டம் அல்ல'' எனக் கூறி முடித்தார்.





# தேவி பாகவதக் கதைகள்

ரம்பன், கரம்பன் என்ற இருவர் தமக்குக் குழந்தையே பிறக்காததால் நீண்ட காலம் கடுந்தவம் புரிந்தார்கள். கரம்பன் பஞ்சநத தீரத்தில் மூழ்கி இருந்து தவம் புரிந்தான். ரம்பனோ ஒரு மரத்தின் உச்சி மீது நின்று தவம் செய்யலானான். அவர்கள் புரியும் கடும்தவம் கண்ட இந்திரன் ஆத்திரம் கொண்டு கிழவனாக உருமாறி வந்து கரம்பனைக் கொன்று விட்டான். தன் தம்பி இறந்தானே என்று மிகவும் துக்கப்பட்டு தன் தலையை அக்கினி பகவானுக்கு அர்ப்பணம் செய்ய எண்ணி ரம்பன் வாளைக் கையில் எடுத்துக் கொண்டான்.

அப்போது அக்கினிதேவன் அவன் முன் தோன்றி ''ரம்பா! ஏன் தற்கொலை செய்து கொள்கிறாய்? உன் தவத்தால் நான் மகிழ்ந்து போனேன். உனக்கு என்ன வரம் வேண்டும்? அதை நான் கொடுக்கிறேன்'' என்றான். ரம்பனும் ''அக்கினி பகவானே! யாராலும் வெல்ல முடியாதவனும் தான் விரும்பும் உருவை எடுத்துக் கொள்ளும் ஒரு மகனை எனக்குக் கொடு. அவனை தேவர்களாலும் சரி, அசுரர்களாலும் சரி, வெல்ல முடியாமல் இருக்க வேண்டும்'' என்ற வரத்தைக் கேட்டான். அக்கினி தேவனும் அவன் கேட்ட வரத்தைக் கொடுத்து விட்டு மறைந்தான்.

ரம்பன் வரத்தைப் பெற்றபின் திரும்பிச் செல்கையில் யட்சர்கள் வசமிருந்த ஒரு பகுதியில் ஒரு பெண் எருமையைக் கண்டான். அதனை ஓட்டிக் கொண்டு அவன் பாதாள லோகத்

4- மஹிஷாசுரவதம்



திற்குச் சென்றான். அங்கு அவன் ஓட்டி வந்த பெண் எருமையை ஒரு ஆண் எருமை பின் தொடர்ந்தது. அதைக் கண்டு கோபம் கொண்ட ரம்பன் அந்த எருமையை அடித்தான். அந்த எருமையோ தன் கொம்புகளால் ரம்பனைக் குத்திக் கொன்றது. அதைக் கண்ட பெண் எருமை தன் உயிரை விட்டது. ரம்பனும் பெண் எருமையும் எரிக்கப் படவே அந்தத் தீயிலிருந்து இரு ராட்சஸர்கள் வந்தார்கள். அவர்களில் ஒருவன் மகிஷன். மற்றவன் ரத்தபீஜன்.

ராட்சஸர்கள் மஹிஷனை தம் மன்னனாக ஏற்று மஹிஷாசுரன் எனப் பெயரிட்டனர். மஹிஷாசுரன் பிரம்ம தேவனைக் குறித்துத்தவம் புரிந்தான். அவரும் அவனுடைய நீண்ட தவத்திற்குப்பின் அவன் முன் தோன்றவே, அவனும் ''தேவா! எனக்கு மரணமே இல்லையென்ற வரத்தைக் கொடுங்கள்'' என்று வேண்டினான்.

பிரம்மாவோ ''இதைக் கொடுக்க முடியாது. பிறந்த எந்த உயிரினமும் இறந்தேயாக வேண்டும். எனவே வேறு ஏதாவது வரத்தைக் கேள்'' என்றார். அப்போது மஹிஷாசுரன் ''என்னை ஆண்களால் தான் கொல்ல முடியும். பெண்ணால் முடியவே முடியாது. அதனால் தேவர்களாலோ, அசுரர்களாலோ, மானிடர்களாலோ எந்த ஆணாலும் எனக்கு மரணம் ஏற்படக்கூடாது. இந்த வரத்தை அளியுங்கள்'' என்று கேட்டான். பிரம்மாவும் ''சரி. உனக்கு எந்த ஆணாலும் மரணம் கிடையாது'' என்ற வரத்தைக் கொடுத்துவிட்டு மறைந்தார்.

இவ்வாறு வரம் பெற்றதும் மஹிஷாசுரன் தேவ லோகத்தைத் தன் வசம் படுத்திக் கொள்ளத் தீர்மானித்து தான் தேவலோகத்தின் மீது படை எடுத்து வரப்போவதாக இந்திரனுக்குச் செய்தி அனுப்பினான்.

இந்திரன் பிரம்மாவைக் கண்டு ''மஹிஷாசுரன் மதம் பிடித்துப்போய் தேவலோகத்தின் மீது படை எடுத்து வரப்போவதாக அறிவித்திருக்கிறான். இந்த ஆபத்தை எப்படித்தடுப்பது?'' என்று கேட்டான்.

பிரம்மாவும் ''நாம் சிவபிரானையும் விஷ்ணுவையும் பார்ப்போம்'' என்றார். உடனே அவர்கள் சிவபிரானைக் கண்டு மஹிஷாசுரனின் படை எடுப்பு பற்றிக் கூறி னார்கள். சிவனும் விஷ்ணுவையும் கலந்து பேசலாம். எனவே மூவரும் விஷ்ணுவைக் காண

வைகுண்டலோகத்திற்குச் சென்றார்கள். யாவரும் ஒன்றாக நின்று மஹிஷாசுரனை எதிர்ப்பது என்று முடிவு செய்யப்பட்டது. யாவரும் தம் வாகனங்களின் மீது அமர்ந்து சென்றனர். தேவர்கள் அசுரர் களைத்தாக்க, போர் பயங்கரமாக நடந்தது.

மஹிஷாசுரனை அவர்களால் தோற்கடிக்க முடியவில்லை. அவனோ இந்திரனையும், திரிமூர்த்திகளையும் தேவர்களையும் விரட்டி அடித்தான். தேவலோகம் மஹிஷாசுரன் கைக்கு வந்து விட்டது. அவன் இந்திரனின் சிம்மாசனத்தில் அமர்ந்தான். முக்கிய பதவிகளைத் தன் ஆட்களுக்கே கொடுத்தான். இந்திரனின் பொக்கிஷத்தைக் கைப்பற்றியதோடு தேவலோகத்தில் எல்லா சுகபோகங்களையும் அவன் அனுபவித்தான்.

தேவர்களோ காடுகளிலும் மலைகளிலும் அலைந்து திரிந்து கஷ்டப்பட்டார்கள். அவர்களால் அக்கஷ்டங்களைச் சகித்துக் கொள்ள முடியாமல் போகவே அவர்கள் பிரம்மாவிடம் போய் ''நீங்கள் எங்களுக்குத் தகப்பனாரைப் போல. எங்கள் கஷ்டங்களைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்கிறீர்களே. ஒரு அசுரன். அந்த மஹிஷாசுரன் எங்களை எல்லாம் தேவலோகத்திலிருந்து விரட்டி விட்டானே. அவனை அழிக்க நீங்கள் ஏதாவது ஒரு வழி காட்டுங்கள்'' என்று கேட்டார்கள்.

பிரம்மாவும் ''என்னால் என்ன செய்ய முடியும்? அவனோ எந்த ஆணாலும் தனக்கு மரணம் நேர்ந்து



விடக்கூடாது என்ற வரத்தைப் பெற்றிருக்கிறான். அவனை ஒரு பெண் தான் கொல்ல வேண்டும். இது பற்றி நாம் சிவனிடம் யோசனை கேட்போம். வாருங்கள். எல்லோரும் கைலாசத்திற்குப் போய் அவரைக் கண்டு பேசுவோம்'' எனக் கூறி அவர்களை அழைத்துச் கொண்டு கைலாசத்திற்குச் சென்றார்.

எல்லோரும் கூட்டமாக வந்திருப்பதைக் கண்ட சிவன் அவர்களைப் பார்த்து ''என்ன விசேஷம்? எல்லோருமாகச் சேர்ந்து வந்திருக்கிறீர்களே'' என்று கேட்டார்.

பிரம்மாவும் ''மஹிஷாசுரன் தேவலோகத்தைக் கைப்பற்றி தேவர்களை அங்கிருந்து விரட்டி விட்டதைத் தான் நீங்கள் அறிவீர்களே. அவர்கள் இப்போது என்ன செய்வது என்று



கேட்கிறார்கள்'' என அவரிடம் தெரிவித்தார்.

சிவனும் புன்னகை புரிந்து ''தேவர்கள் இன்று இப்படிக் கஷ்டப் படுகிறார்கள் என்றால் அதற்குக் காரணம் நீங்கள் மஹிஷாசுரனுக்கு வரம் கொடுத்தது தானே. நீங்கள் கொடுத்த வரத்தின் பயனாக அவனை எந்த ஆணாலும் கொல்ல முடியாது. உங்கள் மனைவி சரஸ்வதியோ, விஷ்ணுவின் மனைவியோ அல்லது என் மனைவி பார்வதியோ அந்த மஹிஷாசுரனைக் கொல்ல தைரியமும் துணிச்சலும் பெற்றவர்களா? போர்கலையில் அவர்கள் பயிற்சி பெற்றவர்களா? இல்லையே. அதனால் விஷ்ணுவையும் கலந்து ஆலோசித்து முடிவு எடுப்போம்'' என்றார்.

கைலாசத்திலிருந்து அனைவரும் புறப்பட்டு வைகுண்ட லோகத்திற்குப் போய் விஷ்ணுவைக் கண்டார்கள்.

அவர்கள் சொன்னதைக் கேட்ட விஷ்ணு ''நாம் எல்லோருமே மஹிஷாசுரனிடம் தோற்றுப் போனவர்களே. அவனை ஒரு பெண்ணால் தான் கொல்ல முடியும் என்றால் நாம் எல்லோரும் நம் சக்தியைக் கொடுத்து ஒரு பெண்ணை சிருஷ்டிப்போம். அவளுக்கு நம் ஆயுதங்களை எல்லாம் கொடுப்போம். அவள் அவற்றைக் கொண்டு மஹிஷாசுரனுடன் போர் புரிந்து அவனைக் கொல்லட்டும்'' என்றார்.

விஷ்ணு இவ்வாறு கூறியதும் யாவரும் தமது சக்தியைக் கொடுக்க அவை எல்லாம் ஒன்று சேர்ந்து பதி

னெட்டு கைகளைக் கொண்ட ஸ்திரீயாகி உருவாகியது. தேவர்கள் தம் ஆயுதங்களை எல்லாம் அவளிடம் கொடுக்க அவளும் ஒவ்வொரு கையிலும் ஒரு ஆயுதத்தை வைத்துக் கொண்டாள். அவள் தேவர்களைப் பார்த்து ''நீங்கள் பயத்தை விட்டொழியுங்கள். அந்த ராட்சஸனை நான் கொல்கிறேன்'' என சிம்மம் போலக் கர்ஜனை செய்தாள்.

அந்த கர்ஜனையைக் கேட்ட மஹிஷாசுரன் ''யார் இப்படிக் கத்துவது? அவளைப் பிடித்து இழுத்து வாருங்கள்'' எனத் தன் ஆட்களுக்குக் கட்டளை இட்டான்.

அவர்கள் போய் தேவியின் அவதாரத்தைக் கண்டு பயந்து மஹிஷாசுரனிடம் போய் ''யாரோ ஒரு பெண் சிங்கத்தின் மீது இருக்கிறாள். அவளது பதினெட்டு கைகளில் விதவிதமான ஆயுதங்கள் உள்ளன'' என்றனர்.

மஹிஷாசுரன் தன் மந்திரியிடம் ''நீ போய் அவளை அழைத்து வா. அவளை என் பட்டத்து ராணியாக்கிக் கொள்கிறேன்'' என்றான்.

மந்திரியும் போய் அந்தப் பெண்ணிடம் ''அம்மணீ! சர்வசக்தி வாய்ந்த எம் மன்னர் மஹிஷாசுரன் தங்களை மணக்க விரும்புகிறார்'' என்று தெரிவித்தார்கள்.

தேவி புன்னகை புரிந்து ''நான் அவனைக் கொல்ல வந்திருக்கிறேன். இதை உங்கள் மன்னனிடம் தெரிவியுங்கள்'' என்றாள்.

அதைக் கேட்ட மஹிஷாசுரன் ''அவளுக்கு அவ்வளவு திமிரா?'' எனக் கூறித் தன் சேனாதிபதியான தாமிராட்சனை அனுப்பினான். அவனை தேவி கொன்றாள். இதனால் கோபம் கொண்டு தேவியை எதிர்க்க அவன் வந்தான். தேவியும் அவனது படைத்தலைவர்களை எல்லாம் கொன்று விடவே மஹிஷாசுரனே அவளுடன் நேருக்கு நேராக நின்று போர் புரிந்தான். அவன் பல உருவங்களில் வந்து போர் புரிந்தான். முடிவில் தேவி சக்கராயுதத்தால் அவனது தலையைத்துண்டிக்க அவன் இறந்தான். தேவர்கள் ஆனந்தம் அடைந்து அவளைத் துதி செய்தார்கள்.





# மகிழ்ச்சி எதில்!

சபாபதியும் உமாபதியும் அடுத் தடுத்த வீட்டுக்காரர்கள். உமாபதி எப் போதும் மகிழ்ச்சியுடனே இருந்து வந்தான். ஆனால் சபாபதியோ எப் போதும் கவலைப்பட்டுக் கொண்டே இருந்தான்.

உமாபதிக்கு ஐந்து ஏகர் நிலம் இருந்தது. இதுவே அவன் மகிழ்ச்சிக் குக் காரணம் என சபாபதி அல்லும் பகலும் உழைத்துப் பணம் சேர்த்து பத்து ஏகர் நிலம் வாங்கினான். அப் போதும் உமாபதி மிகவும் மகிழ்ச்சியுடனேயே இருப்பதைக் கண்டு அதற்கு என்ன காரணம் என்று யோசித்து சபாபதி கவலைப்படலானான்.

உமாபதிக்குத் திருமணமாகியது. அவனது மனைவி அழகாக இருந் தாள். உமாபதியின் மகிழ்ச்சிக்கு இது காரணமாக இருக்கும் என்று எண்ணி சபாபதி ஊர் ஊராகப் போய் உமா பதியின் மனைவியை விட அழகான பெண்ணைப் பார்த்து மணம் செய்து கொண்டாள். அப்போதும் உமாபதி கவலைப்படாமல் சந்தோஷமாகவே இருப்பது கண்டு சபாபதி திகைத்தான்.

சபாபதி மனம் தளர்ந்து விட வில்லை. உமாபதி மாடி வீடு கட்டி யது கண்டு அவன் இரண்டடுக்குமாடி வீடு கட்டிக்கொண்டான். உமாபதி தினமும் இருவருக்கு அன்னதானம் செய்வதைக் கண்டு சபாபதி தினமும் நான்கு பேருக்கு அன்னதானம் செய் தான். அப்படியும் அவன் உமாபதி யைப் போல மகிழ்ச்சியாக இருக்க அவனால் முடியவில்லை.

சபாபதி எப்போதும் உமாபதி என்ன செய்கிறான் என்று கவனித்து அதைப் போல இருமடங்காக அவன் செய்தான். ஆனாலும் அவனால் உமாபதியை விட மகிழ்ச்சியாக இருக்க முடியவில்லை.

இப்படி இருக்கையில் அவ் வூருக்கு ஒரு யோகி வந்தார். உமாபதி அவரை தன் வீட்டிற்கு அழைத்துப்

எஸ். கௌரிநாதன்



போய் பாத பூஜை செய்தான். அது கண்டு அவர் சந்தோஷப்பட்டு ''அப்பனே! உனக்கு என்ன வேண் டும்?'' என்று கேட்டார். உமாபதியும் ''சுவாமிகளே! என் மனைவி நல்ல வள். என் குழந்தைகள் புத்திசாலிகள். எனக்கு உள்ளதைக் கொண்டு நான் திருப்தி அடைவதோடு என்னால் இயன்றதைப்பிறருக்கும் கொடுக்கி றேன். நோய் நொடி என்று என் குடும் பத்தில் யாரும் படுத்ததும் இல்லை. இப்படியே சுகமாய் என் குடும்பம் இருந்து வர அருள் புரியுங்கள். இதுவே நான் தங்களை வேண்டுவது'' என்று பணிவுடன் கூறி வணங்கினான்.

யோகியும் ''நீ ஆசைப்படாமல் உள்ளதைக்கொண்டு திருப்தி அடை வது கண்டு மகிழ்கிறேன். உனக்கு என் மனமார்ந்த ஆசிகள்'' எனக் கூறி அவனை வாழ்த்தினார். அதன் பின் அந்த யோகியை சபாபதி வரவேற்று உமாபதி செய்ததைப் போல இருமடங்கு உபசாரங்கள் செய்தான்.

யோகியும் மகிழ்ந்து ''உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார். அவனும் ''என் அடுத்த வீட்டுக்காரன் உமாபதி எதிலும் என்னை விட உயர்ந்து விடாமல் இருக்க அனுக்கிர கியுங்கள்'' என்று வேண்டினான். அதைக் கேட்டு யோகி ஆச்சரியப் பட்டு ''நீ உனக்காக மட்டும் எதை யாவது கேள். பிறரைப் பற்றிக் கேட் பது முறையல்ல'' என்றார்.

அதற்கு சபாபதி ''சுவாமி! என் மகிழ்ச்சி எதிலும் உமாபதியை மிஞ்சி இருப்பதில் தான் உள்ளது. உங்களால்

முடிந்தால் இதைச் செய்யுங்கள். உங்களால் முடியாவிட்டால் இவ் வளவு தான் என் அதிர்ஷ்டம் என்று இருந்து விட்டுப் போகிறேன்'' என்று சலித்தவாறே கூறினான்.

யோகியும் கொஞ்ச நேரம் கண் களை மூடிக் கொண்டு யோசித்து விட்டு ''உன் விருப்பம் நிறைவே றும். ஆனால் அதற்கு உமாபதியின் ஒத்துழைப்பு தேவை'' என்றார். அதைக் கேட்ட சபாபதி முகத்தைச் சுளித்துக் கொண்டு ''உங்களால் இதைச் செய்ய இயலாது என்றால் அப்படிச் சொல்லிவிட்டு போவது தானே. அதைவிட்டு விட்டு உமாபதி யின் ஒத்துழைப்பு தேவை என்கிறீர் களே. அதெல்லாம் எனக்கு வேண் டாம்'' என்றான் கடுகடுப்புடன்.

யோகியும் ''அட பைத்தியமே! அவனது ஒத்துழைப்பு கிடைத்தால் நீ அவனை விடப்பன்மடங்கு உயர்ந்து விடலாம். அப்படிச் செய்யாவிட் டால் நீ உயரவே முடியாது. எனவே நான் சொல்வதைக் கேட்டு அவனது ஒத்துழைப்பைப் பெற்றுக்கொள்'' என்றார். உடனே சபாபதி உமாபதி யைத் தன் வீட்டிற்கு வரச் சொல்ல ஒரு ஆளை அனுப்பினான்.

உமாபதி வந்ததும் சபாபதியின் விருப்பம் என்ன என்று தெரிந்து கொண்டு அப்போதே தன் ஒத்துழைப் பைத் தருவதாகக் கூறினான். யோகி யும் ''அப்பனே! ஒருவன் தன்னை விட உயர்வதைக் கண்டு யாராவது சந்தோஷப்படுவார்களா?'' என்று கேட்டார்.

உமாபதியும் ''பிறரது உயர்வில் தான் நான் மகிழ்ச்சி அடைகிறேன். நாம் ஒருவரை விடத் தாழ்ந்திருந்தால் பொறாமையும் வெறுப்புமே நம் முள் அதிகரிக்கும். நாம் முன்னேறும் போது அந்த சமயத்தில் மட்டுமே சந்தோஷப்பட முடியும். ஏனெனில் நம் சுற்றுப்பக்கத்தில் பலர் இருக்கி றார்கள். அவர்களில் யாராவது ஒருவர் தினமும் முன்னேறிக் கொண்டு தானே இருப்பார்'' என்றான்.

அதைக் கேட்ட சபாபதிக்கு உமாபதியின் மகிழ்ச்சிக்காண காரணம் தெரிந்தது. அன்று முதல் அவனும் பிறர் உயர்வதைக் கண்டு மகிழ்ச்சி அடைந்து வரலானான்.



# இரு கனவுகளின் விளைவு!

பாலக்காடு பாலன் சமையலில் கை தேர்ந்தவன். அவனுக்கு குடும்பம் என்று எதுவுமே இல்லை. எங்கே யாவது சமையல் வேலை கிடைக் குமா என்று ஊர்ஊராகத் திரிந்து கிடைத்த சமையல் வேலையைச் செய்து எப்படியோ வாழ்ந்து வந்தான். கடைசியில் அவனுக்கு அருணாசலம் என்பவன் வீட்டில் சமையல் வேலை நிரந்தரமாகக் கிடைத்தது.

அருணாசலம் வடிகட்டின கஞ்சன். கல்யாணம் செய்துகொண்டால் வீட்டுச் செலவு அதிகரித்துவிடுமோ எனப் பயந்து கல்யாணமே செய்து கொள்ளாமல் இருந்துவிட்டான். வயதும் அதிகமாகிவிட்டதால், தனக் குச் சமைத்துப் போடவும் வீட்டைக் கவனித்துக் கொள்ளவும் அவனுக்கு ஓர் ஆள் தேவைப்பட்டது. அதற்கு ஏற்ப பாலன் கிடைக்கவே, அவனைத் தன் வேலைகளைச் செய்ய அமர்த்திக் கொண்டுவிட்டான்.

பாலன் வேலைக்கு அமர்ந்ததுமே அருணாசலம் கருமி என்பதையும், வயிற்றுக்குக் கூடச் சரியாகச் சாப்பி டாதவன் என்பதையும் கண்டுகொண் டான். எஜமானனுக்கு எதைச் செய்ய வேண்டுமோ, அதைத் தானே அவ னால் செய்ய முடியும்! எனவே, வாய்க்கு ருசியாக எதையும் செய்து சாப்பிட முடியாமல் அவன் தவித்துக கொண்டிருந்தான்.

தீபாவளி வந்தது. பாலன் துணிந்து



எல்லோர் வீட்டிலும் தீபாவளிக்கு பட்சணங்கள் செய்வது போலச் செய்துவிட்டான். இதை அருணா சலம் அறியவில்லை.

சாப்பிட உட்கார்ந்த அருணாசலம் தட்டுகளில் பலவித பட்சணங்கள் வைக்கப்பட்டிருப்பதைக் கண்டு திடுக்கிட்டான். அவன் பாலனிடம், ''என்னப்பா இது! இப்படி எல்லாம் செய்தால் நான் ஓட்டாண்டியாகிவிடு வேன். ஒரு மாதத்திற்குச் செய்ய வேண்டியவற்றை ஒரே நாளில் சாப்பிடுவதற்கு செய்து வைத்து

எஸ். சங்கர் ராம்

விட்டாயே. குடி முழுகிப் போயிற்றே!'' புலம்பினான்.

பாலனோ, ''ஐயா! இன்று தீபாவளி அல்லவா? வருடத்திற்கு ஒருநாள் தானே இது வருகிறது. இன்றாவது வயிறு நிறைய திருப்தியாக நீங்கள் சாப்பிட வேண்டும். அதற்காகவே அருணாசலமும் சற்று யோசித்து, ''ஆமாம். பண்டிகை தான். நான் மறந்தே போய்விட்டேன்'' என்றான். பாலனைக் கோபித்துக் கொண்டால் அவன் வேலையை விட்டுப் போய் விட்டால் என்ன செய்வது என்ற பயம் அவனைப் பற்றிக் கொண்டது. பட்சணங் களைத் தான் ஒருவனே தின்ன வேண்டும், பால னுக்கு எதுவுமே கொடுக்கக் கூடாது என்று அருணா சலம் தீர்மானித்துக் கொண் டான். அதனால் ஒவ்வொன் றாக அவன் காலி செய்தான். எப்படியோ முடிந்த வரை அவன் தின்றுவிட்டான். கடைசியில் மிஞ்சியது சில ஜிலேபிகளே!



அவற்றை பாலனுக்குக் கொடுக்கக் கூடாது என்று எண்ணிய அருணா சலம் யோசித்து ஒரு வழி கண்டான். அவன் பாலனிடம், ''பாலா! ஜிலேபி களை அவற்றைச் செய்த உடனேயே தின்னக்கூடாது. சில மணி நேரமாவது ஜீராவில் ஊறியபின் எடுத்துத் தின் றாலே ருசியாக இருக்கும். அதனால் இந்த ஜிலேபிகளை எடுத்துக் கொண்டு போய்ப் பத்திரமாக வை. சாயங்காலம் சாப்பிடலாம்'' என்றான்.

பாலனும் அவ்வாறே செய்தான். சாயந்திரமாயிற்று. ஆனால் அருணா சலத்திற்குப் பசியே எடுக்கவில்லை. ஆனால் பாலனுக்கு ஒரு ஜிலேபி கூடக் கொடுக்காமல் எல்லாவற் றையும் அவனே தின்றுவிட விரும்பி னான். அதனால் அவன் பாலனைக் கூப்பிட்டு, ''இன்று தீபாவளியை முன்னிட்டு நாம் இருவரும் ஒரு பந்தயம் போட்டுக் கொள்வோம். இருவரும் போய்ப்படுத்துத் தூங்கு வோம். கவர்ச்சிகரமான கனவுகளைக் காண்போம். யாருடைய கனவு சிறந்த தாக இருக்கிறதோ, அவ ருக்குத் தான் இந்த ஜிலேபி களெல்லாம். சரியா?'' என்று கேட்டான். தன் எஜ மானன் கூறுகிறாரே என்று வேறு வழி இல்லாமல் பாலன் அதற்குச் சம்மதித்தான்.

அருணாசலம் திருப்தி அடைந்து படுத்தான். சற்று நேரத்தில் அவன் பலமாகக் குறட்டைவிட்டுத் தூங்க லானான். பாலனுக்கோ ஒரே பசி. தூக்கமே வரவில்லை. எழுந்து மெது வாக ஜிலேபிகளைப் பத்திரப்படுத்தி வைத்திருந்த சமையலறைக்குச் சென் றான். மூடி வைக்கப்பட்ட பாத்திரத் தின் மூடியைத் திறந்து, அதிலிருந்த ஜிலேபிக்களை ஒவ்வொன்றாக எடுத்து வாயில் போட்டு விழுங் கினான். ஐந்தே நிமிஷத்தில் எல்லா

ஜிலேபிகளும் காலி. பாத்திரத்தை மூடி வைத்துவிட்டு, அவன் சமையல றையிலிருந்து வெளியே வந்து படுத்துத் தூங்கினான்.

காலையானதும் அருணாசலம் எழுந்து பாலனை எழுப்பி, ''என் கனவு மிக அழகானது. ஓர் அரசகுமாரி என்னை மணந்து கொள்ள, நான் ராஜா வாகிவிட்டேன். பெரிய தர்பார். அங்கே இசை, நாட்டியம் என்று அமர்க்களப்பட்டது. ஆகா! எவ்வளவு அழகான கனவு! இப்போது உன் கனவைப் பற்றிச் சொல்'' என்றான்.

பாலனும், ''அதை என்ன என்று சொல்வேன்! நான் கண்ணை மூடிக் கொண்டு படுத்ததும், பயங்கர உரு வில் காளிதேவி என் கனவில் தோன்றி னாள். அவள் கோபமாக 'அடே பாலா! நன்றாகத் தின்று சந்தோஷமாக இருக்க வேண்டிய தீபாவளியன்று நீ எதுவும் சாப்பிடமல் பட்டினியாக இருக்கிறாயா? இது பெரும் பாவம். இப்போதே போ சமையலறைக்குள்!' என்றாள். அவளும் என் பின்னா லேயே வந்து, 'உம். திற, அந்தப் பாத்தி ரத்தின் மூடியை. எடு, அதிலிருந்து ஜிலேபிகளை. ஒவ்வொன்றாக வாயில் போட்டு விழுங்கு' என்று தன் சூலத்தைக் காட்டி மிரட்டினாள். நானும் ஒரு ஜிலேபி கூட மிச்சம் வைக் காமல் எல்லாவற்றையும் தின்று விட்டேன்'' என்றான்.

அருணாசலம் திடுக்கிட்டு, ''எனக்கு எவ்வித சத்தமும் கேட்கவில் லையே. பயங்கரமான காளிதேவி வந் ததும் என்னை ஏன் எழுப்பவில்லை?



நான் அவளை விரட்டி இருப் பேனே'' என்றான். பாலனோ, ''உங் களை எழுப்ப நினைத்தேன். ஆனால் நீங்கள் ராஜாவாகி தர்பாரில் அமர்ந்து, இசையையும், நாட்டியத்தையும் ரசித் துக் கொண்டிருந்த போது நான் உங் கள் தர்பாருக்குள் நுழைய முயன் றேன். ஆனால் உங்கள் காவலாளிகள் என்னை உள்ளே போகவிடாமல் விரட்டிவிட்டார்கள்'' என்றான்.

தான் பாலனை ஏமாற்றப் போய் அவனே தன்னை ஏமாற்றிவிட்டானே என்று அருணாசலம் கலங்கி நின் றான். தன்னிடம் வேலை செய்யும் பாலனை எதுவும் சாப்பிடவிடாமல் செய்ததற்காக அவன் வெட்கப் பட்டதோடு தன் கஞ்சத்தனத்தை விட்டுத் தானும் நன்றாகச் சாப்பிட்டு, பாலனையும் சாப்பிடுமாறு சொன்னான். இவ்வாறு அருணாசலம் திருந்தினான்.

இது அம்புலிமாமாவின் அன்பளிப்பு

# வீரதீர பராக்கிரமன்

10

ஓவியம் : பாணி



தந்தையின் ஆணைப்படி ஆதித்தன் கருட பகவானைப் பூஜித்தான். திடீரெனப் பூஜை அறையில் ஒரு புதிய ஒளி தோன்றியது. விக்கிரகத்தின் காலடியில் இருந்து ஓர் இறகு உயரக் கிளம்பி சுற்றிப் பெரிதாகி புதிய ஒளியை ஆதித்தனின் உடலுள் புகுத்தியது. அதனால் அவனது உருவம் மாறியது. அப்போது ஒரு குரல் அவனுக்கு திவ்யசக்தியை அளித்து உருமாற்றம் செய்திருப்பதாகவும், அது அவனுக்கு மட்டுமே தெரியும் என்றும் கூறியது. கருடனைப் போல பலர் வேடம் பூண்டு, நாட்டில் அட்டூழியங்களைச் செய்தனர். அவர்கள் பிடிபடவே, அவர்களுக்குத் தூக்கு தண்டனை விதிக்கப்பட்டது. அதைக் கேட்ட சேனாதிபதியும், அவனது மகனும் பயந்து போயினர்.







கருடன் பிடிபட வில்லையே!
ஆம், ரவீந்திரா! விரைவில் பிடிபடுவான். அவனை எப்படியும் பிடித்தேவிடுவோம்.
அரண்மனையில் கிடைத்த கடிதம் பற்றி வீரன் ஒருவன் நரேந்திரதேவனிடம் கூறினான்.
கடிதமா? யார் அனுப்பியது? என்ன எழுதப் பட்டுள்ளது?
நான் மன்னரின் விரோதி அல்ல. நண்பனே. மன்னரையும், முதலமைச்சரையும் பாதுகாப்பதற்காகவே பத்திரமான இடத்திற்குக் கடத்திக் கொண்டு போயிருக்கிறேன்.


நல்லதிற்கும், தீயதற்குமிடையே போர் இனி ஆரம்பமாகப் போகிறது.
கொடியவர்களுக்கு இதுவே என் எச்சரிக்கை.
கருடன்! கருடன்!! யார் அங்கே? மன்னனும் முதலமைச்சரும் எங்கே இருக்கிறார்களென்று தேடிக் கண்டுபிடித்துக் கொல்லுங்கள். இது என் கட்டளை.


கருடனைப் பற்றித் தெரிவித்தால் நிறைய சன்மானம் அளிக் கப்படுமாம். நான் இதைக் கவனிக்கிறேன்.
மன்னனும், முதலமைச்சரும் இல்லாது போனதால் ஆட்சிப் பொறுப்பை ரவீந்திரதேவன் ஏற்றுக் கொண்டதாகப் பறைசாற்றப்பட்டது. அங்கங்கு பிரகடனங்கள் தொங்க விடப்பட்டன.

மன்னரின் வண்டி காட்டில்
மலைகளிடையே சென்றது.

மகாப் பிரபுவே! மக்களைத் துன்புறுத்துபவர்கள் எல்லோரும் சேனாதிபதியின் ஆட்களே.

கருடனைப் போல வேடம் பூண்டு பலவிதத்திலும்

மக்களைத் துன்புறுத்துகிறார்கள்.

மக்களைக் கொல்கிறார்கள்.

வீடுகளுக்குத் தீ வைக்கிறார்கள்.

பலவிதமான அட்டூழியங்களைச் செய்து கொண்டிருக்கிறார்கள்.


நம்பிக்கைக்குப் பாத்திரமான மெய்க் காவலர்களையும், வீரர்களையும் விலக்கிவிட்டு, அவர்களுக்குப் பதிலாகத் தன் ஆட்களை நியமித்து அவர்களைக் கொண்டு, மன்னரைக் கடத்திக் கொண்டு போகத் திட்டமிடப்பட்டதை நான் அறிந்து கொண்டேன்.


தங்களுக்கு எவ்வித ஆபத்தும் நேர்ந்துவிடக் கூடாதென்றே தங்களை இங்கே கொண்டு வந்து விட்டேன். வீரபாகு தான் உங்கள் வண்டியை ஓட்டிக்கொண்டு வந்தது. அரண்மனையில் யாருக்கும் தெரியாது.


நீர்வீழ்ச்சிக்குப் பின்புறமுள்ள குகை மிகவும் பத்திரமான இடம்.
சரி, நீ என்னோடு இருக்கப் போகிறாயா அல்லது எங்காவது போகப் போகிறாயா?
நிலைமை எப்படி இருக்கிறது என்று பார்க்க நான் தலைநகருக்குப் போயாக வேண்டும். வீரபாகு உங்களைக் கண் இமைகள் காப்பது போலக் காப்பான்.


வீரபாகு அப்போது அங்கு வந்தான்.
அருணா கூட இங்கேயே இருக்கிறாள்.
வாருங்கள். மன்னரைக் காணலாம்.


மகாப் பிரபு! இவர் தான் வீரபாகு. அருணா என் தந்தையிடம் ஆயுர்வேதம் கற்றுக் கொண்டாள். இப்போது இவள் உங்கள் தேவைகளைக் கவனித்துக் கொள்வாள்.


ஆதித்தன் மாறுவேடத்தில் தலைநகரை அடைந்தான்.
நமது முதலமைச்சர் மாவீரா. அவர்கூடத் தென்படவில்லை என்றால் நம்ப முடியாததாக இருக்கிறது. இது கவலை அளிக்கிறது.
என்ன நடிப்பு! அவனுக்குத் தகுந்த பாடத்தைக் கற்பிக்க வேண்டும்.
தொடரும்.




# போட்டோ வாக்கியப் போட்டி







**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/-

போட்டி முடிவு பிப்ரவரி 2002 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.



வாழ்த்துக்கள்

அக்டோபர் 2001 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :
ஆர். லட்சுமி W/O எஸ். ரங்கசாமி
ப்ளாட் நெ.12, மருதபாண்டியர் 2வது தெரு
பசும்பொன் நகர், பழங்காநத்தம்
மதுரை-625003

பரிசு பெற்ற வாக்கியங்கள்





ஆயர்பாடி கண்ணா நீ!
ஆட வாராய் என்னோடு

அம்புலிமாமா வருட சந்தா :

இந்தியாவில் ரூ.120/-
Payment in favour of CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

